20-3

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—௬௭



உ

திருச்சிற்றம்பலம்

---

அரதத்தாசாரியர்
அருளிச்செய்த

# வடமொழிச்
# சுருதி சூக்தி மாலையும்

சிவலிங்க பூபதி
இயற்றிய

## சதுர்வேத தாற்பரிய சங்கிரகமுமையும்






திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவான்
சபாபதி நாவலரவர்கள்
இயற்றிய

## சுருதி சூக்தி மாலை மொழிபெயர்ப்புடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி :: & சென்னை

இரக்தாக்ஷி ௵ தைமீ

20-3

# பதிப்புரை

சுருதி சூக்தி மாலை யென்னும் இந்நூல் தமிழிலே சதுர்வேத தாற்பரிய சங்கிரக மென்னும் பெயரானே வழங்கப்படும். இதனாசிரியர் சுதரிசனாசாரியரென்னும் முற்பெயருடைய அரதத்தாசாரியர். இந்நூலின் பெருமை முதலியனவும் நூலாசிரியரின் பெருமை முதலியனவும் இந்நூன் முகத்துச் சேர்க்கப்பட்டிருக்கும் முன்னுரையினும் ஆசிரியர் வரலாற்றினும் நன்கு விவரித்துக் கூறப்பட்டிருக்கின்றன. இந்நூலுக்கு அக்காலத்துச் சோழ வரசராகிய சிவலிங்கபூபதி யென்பவர் சிறந்தவுரையியற்றியிருக்கின்றார். இவ்வுரையின் சிறப்பும் முன்னுரையில் விளக்கப்பட்டிருக்கிறது.

இந்நூலின் சிறப்புக்கள் பலவாயினும், தமிழுஞ் சைவமுஞ் செய்த தவப்பயனா யெழுந்தருளிய மாபாடியகாரராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளால் சிவஞான பாடியம் சிவஞான சித்தியாருரை சிவசமவாதவுரை மறுப்பு என்பனவற்றில் பிரமாண நூலாக இந்நூல் எடுத்தாளப் பட்டிருப்பதொன்றே இதன் பெருமையை நன்கு தெரிவதற்குப் போதிய தொன்றாகும். இந்நூலில் வேதமந்திரங்கள் பலவற்றின் பொருள் விளக்கப்பட்டிருக்கின்றது. வேத மந்திரங்களின் மெய்ப்பொருள் இதுதானென்று துணி

தற்குரிய கருவிகள் பலவிருந்தும் ஒரு சிலர் தத்தங் கருத்து வேறுபாடுபெற்றிப் பிறிது பிறிது பொருள் கூறுதலான் உண்டாகும் மயக்கம் இந்நூலான் நீங்கும். இந்நூலின் உரையாசிரியர் தாம் பிரமாணமாகக் காட்ட நேர்ந்த வேதமந்திரங்களுக்கெல்லாம் உரை கூறியிருக்கின்றார். பிரமசூத்திரத்துக்கு நீலகண்டவாசிரியர் செய்த சிவாத்துவித பாடியத்தின்மேற் சிவார்க்க மணிதீபிகை யென்னும் வியாக்கியானம் வகுத்த அப்பதீக்கிதர் சிவபிரானது முழுமுதற் றன்மை விளக்கிச்செய்த நூல்களிற் கூறப்படும் பொருள்களனைத்தும் இந்நூலுரைகளுள் அடங்கிக் கிடப்பனவாகும். இதனாலும் இந்நூற் பெருமையை நாம் உணரலாகும்.

இவ்வரியநூல் பல ஆண்டுகளுக்குமுன் புதுக் கோட்டைச் சம்ஸ்கிருதபண்டிதர் இராமசுவாமி சாஸ்திரியாரென்னும் ஒருவரால் உரையுடன் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது. இப்பொழுது அப் பிரதி கிடைத்தலரிதாதலானும், வேதப் பொருளாராய்தலென்னும் கிளர்ச்சிக்கு இந்நூல் மிக இன்றியமையாத தாதலானும் யாங்கள் இவ்வடநூலை உரையுடன் முதன்முதல் வெளியிடுகின்றோம். வடமொழி யுணர்ச்சியில்லாதாரும் இந்நூற்பொருளை யறிந்துகோடற்கு உதவியாகத் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவானாகவிருந்த யாழ்ப்பாணத்து வடகோவைச் சபாபதி நாவலரவர்கள் செய்த தமிழ் மொழிபெயர்ப்பும் எங்கள்

புதிய பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவ் வடமொழி நூலுரைகளில் நுழைந்த பிழைகளைத் திருத்தியும் தமிழ் மொழிபெயர்ப்பிற்கு அரும் பொருள் விளக்கங் குறித்தும் இந்நூலுக்கு முன்னுரை ஆசிரியர் வரலாறு என்பன எழுதியும் உதவிய திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழ்ப்போதகாசிரியர் திருவாளர் வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை யவர்கட்கு யாங்கள் எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றோம்.

சிவபெருமானது முதன்மை தெரிந்து சைவ சித்தாந்த நெறியில் உலகமனைத்தும் விளங்கல் வேண்டுமென்பது எங்கள் கருத்தாகலின், இந்நூலினை அனைவரும் சாவதான மனத்துடன் பயின்று உண்மை தெளியவேண்டுமென்பது எங்கள் வேண்டுகோள்.

இந்நூலைப் படித்தலான் உண்டாகும் பயன்

ஸ்தோத்ர மேத தவதாய க்ருஹ்வதா
மர்தஸ்ய நிகிலேந ஜாநதாம் ।
க்ராஹ்ய மந்யதபி நாவசிஷ்யதே
ஜ்ஞேயமந்யதபி வா ந கிஞ்சந ॥

(இந்நூலைப்படித்து இதன்பொருளை உள்ளவாறு உணரப்பெறுவார்க்குக் கொள்ளற்பாலது பிறிதொன்றில்லை; அறிதற்பாலதும் பிறிதொன்றில்லை; எல்லாப் பேறும் இதனானே உண்டாம்) என அரதத்தாசாரியர் அருளிச் செய்திருக்கின்றார். ஆதலின்

அனைவரும் இந்நூலை நன்கு கற்று இதன்பொருளை உள்ளவாறுணர்ந்து சிவபெருமானது பேரின்பப் பெருவெள்ளத்துட் டிளைக்குமாறு வேண்டுகின்றோம்.

திருநெல்வேலி, ௭. ஐப்பசி, ௯௱௨. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## பொருளடக்கம்

# முன்னுரை

சுருதி சூக்தி மாலை யென்னும் இந்நூல் ஏறக் குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சோழ நாட்டிலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய சுதரிசனுசாரிய ரெனப்படும் அரதத்தாசாரியராலே அருளிச் செய்யப்பட்டது. இது நான்கு வேதங்களாலும் முழுமுதற் கடவுளென அறுதியிடப்பட்டவர் சிவ பெருமானே யென்பதை ஆக்ஷேப சமாதானங்களால் விளக்குகின்றது. இதற்குச் சதுர்வேத தாற்பரிய சங்கிரக மென்பதும் மற்றொரு பெயர். இந்நூல் சுருதி சூக்தி மாலை யென்னும் பெயரான் வழங்கப்படுதல் *'**पञ्चाशदुत्तरशता श्रुतिसूक्तिमाला**' (நூற்றைம்பது சுலோகங்களுடைய சுருதி சூக்தி மாலை) என வருதலானும், சதுர்வேத தாற்பரிய சங்கிரக மென்னும் பெயரான் வழங்கப்படுதல் † '**तात्पर्य सङ्ग्रहमहं विदधे महेश मह्यं प्रसीद नयमामृजुना पथा त्वम् ।**' (மகேச, தாற்பரிய சங்கிரகத்தைச் செய்யும் என்னை மெய்ந்நெறியிற் செலுத்துக) என வருதலானும் அறியப்படும்.

இந்நூற்கு அக்காலத்துச் சோழவரசராகிய சிவலிங்கபூபதியால் ஓர் சிறந்தவுரை யியற்றப்பட்டிருக்கிறது. அவ்வுரைக்குத் 'தத்துவப் பிரகாசிகை'

---

* சுருதி சூக்தி மாலை சுலோகம். கடுக.

† ,, ,, உ.

என்பது பெயர். இது * 'तत्वप्रकाशिकाख्या व्याख्या शिवलिङ्ग भूभुजा रचिता ।' எனவருதலான் அறியப் படும். உண்மையிவ்வாறிருப்பினும், உரையின் பெயர் சதுர்வேத தாற்பரிய சங்கிரக மென்றே பலராலும் வழங்கப்படுகிறது. அதனை அநுசரித்தே இப்பதிப் பிலும் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அரதத் தாசாரியர்சரித்திரம் §'ततस्सर्वज्ञतां प्राप्य मातुलाद्धरदत्त- कात् ॥ २४ ॥ मालायाश्श्रुतिसूक्तीनां व्याख्यानमकरोद्विसः ।' (அவர்-அரதத்தாசாரியரது மருகர்-தமது மாமனு ராகிய அரதத்தரிடமிருந்து யாவும் அறிந்து சர்வஞ் ஞரானார். அவர் சுருதி சூக்தி மாலைக்கு வியாக்கி யானஞ் செய்து புகழ்பெற்றார்) என்று கூறுகின்றது. அவ்வியாக்கியானம் கிடைத்திலது.

இனி, இந்நூல் சைவசித்தாந்த சந்தானசாரியர் நால்வருளொருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகளாலே தாம் அருளிச் செய்த பௌஷ்கர வியாக்கியானத்தில் 'भगवन् देवदेवेश ब्रह्मवि- ष्णिवन्द्र नायकः । आपिंगल जटाचूडारोपितार्द्धेन्दु शेखरः ॥' எனவருஞ் சுலோகத்திற்கு உரையருளுங்கால் பகவப் பெயருடையார் சிவபெருமானே யென்பது அரதத் தாசாரியரால் சுருதி சூக்தி மாலையில் நன்கு நிறுவப் பட்டதென அருளிச் செய்திருப்பதாக அறிஞர் கூறு

* சுருதி சூக்தி மாலை உரைப்பின்னுரை.

§ பவிஷ்யோத்தரபுராணம். சிவபக்தமான்மியம். கூ௯. உ௪.

¶ பௌஷ்கராகமம். பதிபடலம். க.

கின்றார்கள். ஸ்ரீ பாஷ்யகாரராகிய மாதவச் சிவ ஞான சுவாமிகள் தாம் அருளிச்செய்த சிவஞான பாடியத்தில் சிறப்புப்பாயிரவுரையில் சைவாகமப் பிரா மாணியம் நிலை நிறுத்துமிடத்துத் 'துறக்கம் வேண்டி யோன் சோதிட்டோமத்தான் வேட்க என்றற்றொடக் கத்துச் சுருதிகட்கு அவைவேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளும் அத்தன்மையவாகிய கற்ப சூத் திரங்களும் இன்றியமையாது வேண்டப்பட்டுமாறு போல வேதத்துள் விதிக்கப்படும் சிவபூசை முத லிய விதிகட்கும் அவற்றை வகுத்துக்கூறும் காமிக முதலிய சிவாகமங்கள் இன்றியமையாது வேண்டப் பட்டு நிற்றலின் அவை ஆன்றோரால் தழுவப்படுதல் ஒரு தலையாதலானென்க. இது சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் அரதத்தாசாரியர் கூறியவாற்றான் அறிக.' எனவும், முதற் சூத்திரத்து இரண்டாவது அதிகரண வுரையில் 'உயர் காயத்திரிக்குரிப்பொருளாகலிற்...... என்பது தெளிக வியல்புணர்ந்தோரே யென்றிங்ங னம் அரதத்தாசாரியர் கூறிய இவ்விருபத்திரண்டு ஏதுக்களானும் பரமசிவனே பரம்பொருளென்பது தெளியப்படுதலின், அவனே முழுவதும் ஒடுக்கியுள தாக்கும் சருவகாரணனென்பது உணர்ந்துகொள்க' எனவும், சிவஞான சித்தியுரையில் 'உரைத்தவித் தொழில்கள்' என்னுந் திருவிருத்தவுரையில் 'வேதம் புராணம் இதிகாச முதலியவற்றிற்கும் இதுவே கருத் தென்பது சதுர்வேத தாற்பரிய சங்கிரக முதலியவற் றுட்காண்க' எனவும், சிவசமவாதவுரை மறுப்பில்

'ஒன்றெனுமதனால்' (சூ. ௬) 'வேதநூல் சைவநூல் (அ. ௧௫) என்னுந் திருவிருத்தங்கட்குத் திருவண்ணாமலை ஞானப்பிரகாச முனிவர் கூறியவுரை பொருந்தாதென்று அருளிச் செய்யுமிடத்துமுறையே 'அரதத்தாசாரியர் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் *अलीकम् என்றதற்குத்தாற்பரியம் அதுகொண்டு தானே நிருபசரிதைக்கியஞ் சொல்லுதல் கூடாதென்பதாம்' எனவும் 'பதிபசுபாச பதார்த்த பேதங்களும் விபூதி ருத்திராக்ஷதாரண பஞ்சாக்ஷரஜெப சிவபூஜாதி சைவதருமங்களும் பிறவும் வேதாகமிரண்டினும் சுருக்கமாகவும் விரிவாகவும் சமமாகவே சொல்லுதலின் அந்தவிரண்டற்கும் பேதமில்லை யென்று சதுர்வேத தாற்பரிய சங்கிரகாதிகளி லெடுத்தோதியதும் நோக்காது' எனவும் அரதத்தாசாரியரையும் அவர் திருவாக்குக்களையும் போற்றி யருளினார்கள். சதுரதிக சதப் பிரபந்தகருத்தாவும் நீலகண்டமதப் பிரதிஷ்டா குருவுமாகிய அப்பதீக்கிதர் சிவபரத்துவம் விளக்கி யியற்றிய சிவதத்துவ விவேகத்தில் † व्यवस्थापितं च निपुणतरं श्रुतिसूक्तिमालायाम्' (நிபுணதரரால் சுருதிசூக்திமாலையில் நிலை நிறுத்தப்பட்டது)என்றும் சிவகர்ணாமிர்தத்தில் 'यस्त्वनन्तरं नारायणस्य प्रस्तावः स तस्योपासककोटि प्रवेशतात्पर्येणेतिसमर्तितं तात्पर्य संग्रहे श्रीसुदर्शनाचार्यचरणैः पूर्वाचार्यैरिति नेह पुनरुपन्यस्यते विस्तरापत्तेः । (இனி நாராயணனை அடுத்த அநுவாகத்திற் றுதித்

---

* சுருதிசூக்திமாலை. சுலோகம் ௧௨௫.

† சிவதத்துவ விவேகம் சுலோகவுரை

தது அவனை யுபாசக கோடியுள் அடக்குதற்பொருட் டென்று சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்திற் சுத ரிசனாசாரிய சரணர் நாட்டியருளினர். பூர்வா சாரியர் விரித்ததனை ஈண்டு மறித்து முறையாம் விரியு மாகலின்) என்றுங் கூறியிருக்கின்றனர். இவற்றால் இந்நூலின் பெருமையும் ஆசிரியர் பெருமையும் நன்கு விளங்கும்.

அரதத்தாசாரியர் சரித்திரம் பரமேதிகாசமாகிய சிவரகசியத்திலே ஒன்பதாவது அமிசத்திலே எ௬ சுலோகங்களாலும், பவிஷியோத்தர புராணத்திலே சிவபக்தமான்மியத்திலே ௫௪ முதல் ௬௫ வரையுள்ள பன்னிரண்டு அத்தியாயங்களில் அ௬௫ சுலோகங் களாலும் கூறப்பட்டிருக்கின்றது. அச்சரித்திரம் அரதத்தாசாரியர் இந்நூலைச் சிவபிரானது மகிமை யைக்கூறிய தம்மோடு வாதஞ்செய்த தம் பிதாவாகிய வாசுதேவர் முதலிய வைணவர்கள் தேறுமாறு அவர் கள் கூறியவண்ணம் கஞ்சனூர் வரதராஜ சுவாமி சந் நிதியிற் பழுக்கக் காய்ச்சிய இருப்பு முக்காலியிலிருந்து அருளிச்செய்து யாதோ ரிடையூறுமின்றி விளங்கிச் சிவபரத்துவஞ் சாதித்தனரென்று கூறுகின்றது. இந் நூலின் இரண்டாவது சுலோகத்தில் 'वेदेषुवा तदनु- यायिषु वा विचार्य तन्त्रेषु वाक्यमखिलं प्रतिपादकन्ते ।' என வருவதும் இறுதிச் சுலோகத்தில் 'अपरागमवैदिकेषु ।' எனவருவதும் இந்நூல் வாதசம்பந்தமாகச் செய்யப் பட்டதென்பதை வலியுறுத்துகின்றன. வாதத்தின்

விவரத்தை இந்நூன் முகப்பிற் சேர்க்கப்பட்டிருக்கும் 'அரதத்தாசாரியர் சரித்திரம்' என்பதிற்காண்க.

அரதத்தாசாரியர் உமாபதி சிவாசாரிய சுவாமிகளாலே பிரமாணவாசிரியராக எடுத்தாளப் பட்டிருக்கிறார்களென அறிஞர் கூறுவது மேலே குறிக்கப் பட்டிருக்கிறது. உமாபதி சிவாசாரிய சுவாமிகள் 'சங்கற்ப நிராகரண' மென்னும் நூலினை அருளிச் செய்தகாலம் சாலிவாகன சகம் கஉ௩௫ என்பது அந்நூற் பாயிரத்தால் விளங்குகின்றது. ஆகவே, அரதத்தாசாரியர் இற்றைக்கு அறுநூறு வருடங்கட்கு முற்பட்டவ ரென்பது விளங்குகின்றது. இனி அவர்கள் தாம் அருளிச்செய்த 'அரிகரதார தம்மியம்' என்னும் நூலில் *'ग्राहाशितं शिशुं अजीवयदेकदासो गत्वा परः पुरवरं स्वयमन्तकस्य । कोवानयोरधिक इत्यनुचिन्त्य वृद्धास्सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥' (†ஒருவனடியவனிடங்க ருண்டபிள்ளை யதன்வாய்நின் றுயிர்ப்பித்தானீண், டொருவியுயர் தருமபுரத் தொருவனுற் இயழைத்தனனுண் டுறுசே யிந்த, விருவர்தமி லெவனதிகனெனவூகித் துண்மையிசைத் திடுகமாசு, மருவுதலி லறிவுடையீ ரியாமவனை யடைந்துவழி படுவாமன்றே) எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலையுண்ட பாலனை யழைத்த அற்புதச் செயலைக் கூறுகின்றார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலம் ஒன்ப

---

* அரிகரதாரதம்மியம். சுலோகம். கO௩.

† யாழ்ப்பாணத்து நல்லூர்ப்பண்டித தர்க்க குடாரதாலுதாரியவர்கள் மொழிபெயர்ப்பு.

தாவது நூற்றாண்டெனச் சரித்திர வாசிரியர்கள் நிச்சயிக்கின்றார்கள். ஆகவே அரதத்தாசாரியர் காலம் ஒன்பதாவது நூற்றாண்டுக்கும் பதினான்காவது நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலமாதல் வேண்டும். 'கூரேச விஜயம்' என்னும் நூல் அரதத்தாசாரியர் சிவபெருமானே முழுமுதற் கடவுளென்பதற்கு இருபத்திரண்டு காரணங்கள் கூறியருளிச் செய்த *சுலோக பஞ்சகத்திற்கு மறுப்பாக இராமாநுஜ முனிவரின் சீடர்களுள் ஒருவராகிய கூரத்தாழ்வாராற் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. இதனால் அரதத்தாசாரியர் கூரத்தாழ்வாருக்கு ·முற்பட்டவரென்பது ஏற்படும். இராமாநுஜ முனிவர்காலம் பதினோராவது நூற்றாண்டென நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. ஆதலின் அரதத்தாசாரியர் ஒன்பதாவது நூற்றாண்டிற்குப் பின்னும் பதினோராவது நூற்றாண்டிற்கு முன்னுமிருந்தவராதல் வேண்டும். அரதத்தாசாரியர் விமானமேறிக் கைலைசென்ற காலத்தைக் குறிக்கும் சுலோகமொன்று பின்வருமாறு காணப்படுகின்றது:—

कल्यादौ च चतुस्सहस्र सहिते यत्रैकविंशोनके
पुष्येमासि विळंबिनाम्निखमगादष्टप्रजो मौद्गलः ।
पञ्चम्यां सितपक्षके भृगुदिने सह्यात्मजोदक्तटे
कंसग्रामनिवासिभिस्सुदर्शनस्सार्द्धं विमानोज्वलः ॥

இதனால் கலியப்தம் ௩௯௭௯. விளம்பி ௵ தை௴ பூர்வபக்ஷ பஞ்சமி வெள்ளிக்கிழமை அரதத்தாசாரி

* இது பஞ்சாத்தின மாலிகை யெனவும் வழங்கப்படும்.

யர் கைலையடைந்த நாளென்றேற்படுகின்றது. ஆகவே அரதத்தசாரியர் காலம் ஒன்பதாவது நூற்றாண்டின் இடைப்பகுதி யென்று நிச்சயிக்கலாகும்.

இனி இந்நூலில் அரதத்தாசாரியர் ஈசுவர விலக்கணங்கள் ஐந்தெனை நிர்ணயித்துக்கொண்டு அவ்விலக்கணங்கள் சிவபிரானுக்கேயுள்ளன வென்பதை வேதப் பிரமாணங்களால் நிலை நிறுத்துகின்றார்கள். அவ்விலக்கணங்களாவன:—வணக்கத்தினுக்கு உரியனாதல், மங்கல குணத்தனாதல், உபாசிக்கப்படுபவனாதல், அறிவைச் செலுத்துபவனாதல், யாகத்திற்குத் தலைவனாதலென்பன. முதலில் ஈசுவரப்பெயர் வழக்குச் சிவபிரானுக்கே பொருந்துமென்பது காட்டப்பட்டு ( ந. முதல் அ. சுலோகங்கள்) அப்பால் வணங்கப்படுந் தன்மை சிவபெருமானுக்கே யுரியதென்பது வேத வாக்கியங்கள் பலவற்றாலும் பாரதசாஸ்திரத்தில் தேவர்கட்கு அபிநயம் கூறிய வாக்கியத்தாலும் ஸ்தாபிக்கப்படுகிறது. பின்னர் இருக்குவேதம் 0. கஉ. கவது மந்திரமாகிய 'स्तोमं वो अद्य रुद्राय' என்பதன் பொருள் விளக்கிக் கூறப்படுகின்றது. மேல் * வேதத்தில் வணக்கவாக்கியங்கள் சிவபெருமானுக்கு நேராக

---

* இதனை நீலகண்ட தீக்ஷிதர் 'वाणंकाश्चन वाणकोण-मितराः वाणस्यमूलं परायन्तारं कतिचिद्द्रथांगमितराश्शिष्टाः पुनः स्वामिनम्। इत्थं संस्तुवतेचिरन्तनगिरस्साक्षात् प्रणम्यापि यं सस्वामी मम दैवतं तदितरो नांनापि नांनायते ॥' எனச் சிவோத்கர்ஷ மஞ்சரியிற் கூறினர். ஸ்ரீ சிவஞான சுவாமிகள் 'எப்பொருட் கண்ணுமிறைவன் கலந்துளனென்

வும் அதிட்டிக்கப்படும் பொருள்கள் வாயிலாக வும் கூறப்படுகின்றன வென்பது விவரிக்கப்படுகின் றது. (கூ—உக. சுலோகங்கள்). உருத்திர சத்தத் தாற் புத்திரகாமேட்டியிற் சோமதேவதையோடு விளிக்கப்பட்டவர் சிவபிரானாரல்லரென்பதும் உருத் திரப் பெயர் வழக்கு இவ்விவர்க்கு உண்டென்பதும் அது பொருந்துமாறும் பின்னர்க் கூறப்படுகின்றது (உஉ-உஅ சுலோகங்கள்).

இனி ஐசுவரிய முதலிய ஆறனையுமுடையான் பகவனெனப்படுவனென்பதும், அவ் வாறும் சிவபிரா னிடம் அமைந்துகிடத்தலின் அவரே பகவப் பெய ருடையாரென்பதும், மெய்யுணர்ந்து அவாவறுத்தா ரைப் பகவப் பெயரானழைத்தல் பொருந்துமென்ப தும், சிவபிரானைப் பகவப் பெயராற் றுதிக்கும் சுருதிக ளிவை யென்பதும் கூறப்படுகின்றன. (உகூ-ஙடு சுலோகங்கள்.) பின்னர் நாராயணோபநிடதத்து வரும் 'तस्या शिकाया मध्ये परमात्मा व्यवस्थितः। स ब्रह्मा स शिवः सेंद्रः सोऽक्षरः परमः स्वराट्॥ என்னும் மந்திரம் ஆராயப்படுகின்றது: பின்னர் ' नारायणपरोज्योतिरात्मा नारायणः परः । नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः । என்பது ஆராயப்பட்டு அவ்வாறு நாராயணனைக் கூறி யது சிவோகம் பாவனை விசேடத்தாலென்பது விளக் கப்படுகின்றது. அப்பால் முன்னர் விபூதி கூறுகின்ற

பது தெளிந்து கோடற்பொருட்டுத் திருவுருத்திரத்தின் அவ் வாறு ஒதப்பட்டதெனக்கொள்க' என்றருளிச் செய்தது மீண்டறியத் தக்கது.

விடத்து விஷ்ணுவுஞ் * சேர்த்துப் படிக்கப் படாமைக் குக் காரணமும் ஆண்டு சிவசத்தத்தாற் கூறப்பட் டவர் துரியமூர்த்தியல்லரென்பதும் சிவபிரானைப் பிரதிபாதிக்குமிது நாராயணோப நிடதமெனப் பெயர் பெற்றவாறும் பிறவுங் கூறப்படுகின்றன. (௩௬-௫௫ சுலோகங்கள்.) இனிக் காயத்திரி மந்திரப் பொருள் ஆராயப்படுகின்றது. காயத்திரி மந்திரத்துவரும் பர்க்க சத்தம் ஸகாராந்தமன்று அகாராந்தமேயென் பது வியாகரணநூற் பிரமாணத்தாலும் மைத்திரா யணோபநிடதம் தலவகாரப் பிராமண மென்பவற் றாலும் நிறுத்தப்படுகின்றது. பின்னர்ப் 'பர்க்கன்... அதனை'யென இலிங்கபேதமாக அந்வயித்தல் ஆரா யப்பட்டு அதற்குச் சமாதானங் கூறப்படுகின்றது. †அப்பால் இம்மந்திரம் ஆதித்தன் மேலுஞ் செல்லு மாறுங் காரணமும் விளக்கப்படுகின்றன. (௫௬-௭0 சுலோகங்கள்.) இனிச் சிவபெருமானே யாகபதியென்

---

* இப்பொழுதுள்ள அச்சுப்பிரதிகளில் திருமாலும் விபூதியிற் சேர்த்துப்படிக்கப்படுதல் காணப்படுகின்றது. அஃது இடைச் செருகல்.

† இவ்வுண்மையைச் சிவதத்துவவிவேகத்து வரும் 'உரைக்கு மீசானச் சுருதியாற் றெரிக்குமுன்னிடத்தெய்து மென்பதுவே, பொருத்தமாம் புருட சூத்தத்தின் முடிவு புனை மலர்க் கருங்குழல் பாகா, விருப்புறுமேனோர் பூசனை விதி யுள் விளம்பினு மவ்விதிக் கேற்பக், கருத்துறும் பொருட்டுப் பொருள்விரித் தறவோர்காட்டினு மிதுவழுப்படாதே' என் னும் செய்யுளானும் அதனுரையானும் அறிக.

பது பல வேத வசனங்களால் நிறுவப்படுகின்றது. (எக- அஉ. சுலோகங்கள்). இவையனைத்தும் 'यस्मै नमोभवति' என்று தொடங்கிவரும் முதற் சுலோகத்தின் விவரணமாயமைந்து கிடப்பன. இனி 'वेदेषु वा' என்று தொடங்கிவரும் இரண்டாவது சுலோகத்தின் விவரணமாக வேதம் கற்பசூத்திரம் மிருதி முதலியவற்றில் ஆசங்கைக்கிடமாய பல விஷயங்கள் ஆராயப்பட்டு அவையனைத்தும் சிவபிரானது பிரபாவத்தையே முழக்குகின்றனவென்பது கூறப்படுகின்றது. இடையே இயைபு பற்றி சிவாகமப்பிராமாணியமும் வேதத்தில் வரும் அத்துவிதப்பொருள் உபசரிதைக்கியமென்பதும் கூறப்பட்டன. (அரு-கசக. சுலோகங்கள்) இறுதியாக வீடு பேற்றையடைய அவாவுவோர் சிவபெருமானையே சரணமடைக வென்பது சுவேதாச்சுவதர மந்திரங்கொண்டு நிலை நிறுத்தப்பட்டும் நூற்பயன் கூறப்பட்டும் நூல் முடிக்கப்படுகிறது. (கசஉ-கருக. சுலோகங்கள்.)

இவ்வாற்றால் சைவ சமயத்திற்கு மூலமாகிய வேதங்களின் பொருளை உள்ளவாறு அறியப்புகுவார்க்கு இந்நூல் எவ்வளவு இன்றியமையாதது தென்பது நன்கு புலப்படும்.

இனி வேதப் பொருளை உள்ளவாறு உணர்தற்குப் புராணங்களே அங்கமாயிருக்கின்றன. இக்காலத்தார் இவ்வுண்மை தேறுமல் புராணங்களைச் சரித்திர நூல்களாகக் கொண்டு தாமறிந்த அளவிலே பிரமாணமாகக் கொண்டும் கொள்ளாதும் ஒழிவர். ஸ்ரீ அரதத்

தாசாரியர் * 'वेदार्थनिर्णयविधौ हि पुराणमङ्गम्' (வேதப் பொருளை நிச்சயித்தற்குப் புராணம் அங்கமாம்) என் றருளிச் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளும் சிவஞானபாடியத்து முதற் சூத்திரத்து இரண்டாமதிகரணவுரையில் 'இனி உண்மையான் நோக்குவார்க்குச் சிவபுராணங்களெல்லாம் வேதப் பொருளையே விரித்தெடுத்தோதுதலிற் சிறந்த பிர மாணமெனவும், ஏனையபுராணங்கள் அங்ஙனம் அல் லாமையின் இவற்றோடு முரணியவழி முரணாதவாறு உய்த்துணர்ந்து பொருள் கொள்ளப் படுமெனவும்... ...ஓர்ந்துணர்க' என்றருளிச் செய்தனர். ஸ்ரீ ஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும் சிவபெருமானது முழு முதற்றன்மையை விளக்குவன புராணங்களே யென் பதை 'வேத முதல்வன் முதலாக விளங்கிவைய, மேதப்படாமை யுலகத்தவரேத்தல் செய்யப், பூத முதல்வன் முதலே முதலாகப் பொலிந்த, சூதனொலி மாலை யென்றேகலிக் கோவை சொல்லே' என்றரு ளிச் செய்தனர். ஸ்ரீ சேக்கிழார் நாயனாரும் இத் திருப்பாசுரப் பொருள் அருளிச் செயுமிடத்து' வேத முதல்வ னெனுமெய்த்திருப் பாட்டினிலே, ராதியுல கோரிடர் நீங்கிட வேத்தவாடும், பாத முதலாம் பதி னெண் புராணங்களென்றே, யோதென்றுரை செய் தனர் யாவுமோ தாதுணர்ந்தார்' என அதனை நிலை நிறுத்தி யருளினர். இவ்வுண்மையைக் கடைப் பிடித்தே இந்நூலுக்கு உரை வகுத்த சிவலிங்கபூபதி

---

* சுருதி சூக்தி மாலை சுலோகம். கள.

யென்னும் அருளாளர் அரதத்தாசாரியர் கூறுவதற்கு ஆதாரமாயுள்ள வேதப்பகுதியை எடுத்து உரைகூறி அப்பால் அதனைவலியுறுத்தற்குப் புராணங்களி லிருந்து பல மேற்கோள்களைப் பொழிவாராயினர். இடையிடையே தடை வந்த காலத்து அத்தடையின் பிரமாண அப்பிரமாணத்தன்மையை ஆராய்ந்து உண் மையை உரையாளர் வெளியிடுவது மிகவும் பாராட் டத்தக்கது. அவ்வுரையின் நயங்களையெல்லாம் எடுத் துக் கூறுதல் விரிந்த கட்டுரையா மாதலின் இரண் டொரு நயமாத்திரம் இங்கே கூறுதல் தகும்.

அரதத்தாசாரியர் 16-வது சுலோகத்தில் 'பிரமன் முதலியோர் தம்மைக் குறித்துச் செய்யப்படும் வணக் கங்களைத் தமக்கென என்று கொள்ளக் கருதார்: என்னை? சோரனல் வெளவிக் கொணரப் படினும் முடியணி அரசற்கே யுரியதாகலின், அதனை யெவ னும் என்று கொள்ளக் கருதான்; கருதுமாயின், அப்பெற்றியான் அரசனலொறுக்கப்படுதல் ஒருதலை யாதல் போல அவருஞ் சிவபிரானு லொறுக்கப்படுத லொருதலையாகலின். அற்றேல், அவரேன்று கொள் ளுமாறுதா னென்னை யெனின், அவ்வணக்கத்தைச் சிவார்ப்பணஞ்செய்தலே என்று கொள்ளுமாறென்க' என அருளிச் செய்தனர். சிவலிங்கபூபதி இக்கருத் தினைக் கூறும் இருக்குவேதத்து மு. கூஉ. கூ-வது மந் திரமாகிய † स्तोमं वो अद्य रुद्राय शिक्वसे क्षयद्वीराय नम-

† இம்மந்திரத்திற்குக் கிரிவித் முதலியோர் கூறிய மொழிபெயர்ப்புப் பிழையாதல் அறிக.

**सा दिदिष्टन । एभि शिवस्ववां एव यावभि दिवस्सिषक्ति स्वयशाः निकामभिः ॥** ' என்பதைத் தமது உரையில் எடுத்துக் காட்டி அதற்கு உரை வகுத்து அக்கருத்துக்கு மாறுபட்டுச் சுமார்த்தர் முதலியோர் தாம் செய்யுஞ் சந்தியாவந்தனத்திற் படிக்கும் * **आका-शात्पतितं तोयं यथा गच्छति सागरम् । सर्वदेव नमस्कारः केशवं प्रति गच्छति ॥** என்பதை ஆராய்ந்து மிருதி வாக்கியத்திற்குப் பிரமாணத் தன்மை இவ்வளவிற் கொள்ளலாமென்று கூறி இவ்வாக்கியம் பிரத்தியக்ஷ சுருதிக்கு மாறுபட்டிருத்தலின் விரோ தாதிகரண நியாயத்தாலே விப்பிரலம்ப வாக்கியம் போல அப்பிராமாணியமாமென விளக்கியிருக்கின்றார்.

அரதத்தாசாரியர் 22-வது சுலோகத்திலே 'சிவ பிரானை ஏனைத் தேவரோ டொப்பவைத்து வணங்கலும் வாழ்த்தலும் வேள்விக்கண் விளித்தலும் நன்றாகா என்க' என்றருளிச் செய்தனர். சிவலிங்க பூபதி இதற்கு மூலமாகிய இருக்கு வேதத்து உ. நக. ச-வது மந்திரமாகிய '**मात्वा रुद्र चुक्रुधामा नमोभिर्मा दुष्टुती वृषभ मा सहूती ।**' என்பதை எடுத்துக் காட்டி அதற்கு உரைவகுத்து அதனை வலியுறுத்தும் வசனங்களை ஆதித்திய புராணம் பராசர புராணம் என்பனவற்றிலிருந்து எடுத்தாண்டிருக்கின்றார். திருநாவுக்கரசு சுவாமிகளும் 'பொது நீக்கித்

---

* வானத்தினின்று விழும் நீர் கடலை அடைதல்போல எல்லாத் தெய்வவணக்கமும் கேசவனைப் போய் அடைகிறது என்பது பொருள்.

தனை நினையவல்லார்க் கென்றும், பெருந்துணையை' யன்றருளிச் செய்தனர். ஸ்ரீசிவஞான சுவாமிகளும் 'இளநிலா, விரிமுடிப் பிரானிருக் கயிலையின் மேயி னான், பொதுவறத் தொழுதனன் போற்றிநின் றுரை செய்வான், மதுமலர்ப் பொகுட்டணி மாளிகைப் பண்ணவன்' எனவும், 'அவ்வேள்வி முதலியனவும் சிவ பிரானை நோக்கிப் பொது நீக்கிச்செய்யின், அஃதேதனைய போலப் பசு புண்ணிய மாதலின்றி முன்னர்க் கூறப் படும் பொதுச்சிவ புண்ணியமா மெனக்கொள்க' என வும் அருளிச் செய்தனர். இவ்வாறு இவ்வுரையில் அறியக்கிடக்கும் விஷயங்கள் பல.

இனி, 'வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறு மாப்பும், புண்டரிகப் போதுறையும் புத்தேளிறு மாப்பு, மண்டர்தொழ வாழுனிறுமாப்பு மாலால, முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலை யால்' என்னும் இச் செய்யுளைப் பலரும் அறி வர். இப்பொருள் பாரதத்துத் துரோண பரு வத்தில் '**ब्रह्मणस्सृष्टि कर्तृत्वं विष्णोर्दानव मर्दनम् । स्वर्गाधिपत्यमिन्द्रस्य शिवपूजाविधेः फलम् ॥** எனவருகின் றது. இதனைச் சிவலிங்கபூபதி நன்கு விளக்குகின் றார். இருக்கு வேதத்து ரு. ௬. ௬-வது மந்திரம் '**तव श्रिये मरुतो मर्जयन्त रुद्र यत्ते जनिम चारु चित्रम् ।**' என்ப தாக மேற்கூறப்பட்டதன் உண்மையைப் போதிக் கின்றது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் 'பூத்தேர்ந் தாயின கொண்டுநின் பொன்னடி, யேத்தா தாரில்லை யெண்ணுங்கால்' என்றருளிச் செய்தனர்.

பகவற்கீதையிலே கண்ணபிரான் *' ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति । भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया । तमेव शरणं गच्छ सर्वभावेन भारत । என்றருளினார். இங்கே ஈசுவரப் பெயராற் கூறப்பட்டவர் பிரகரணம் பற்றித் திருமாலென்று ஒரு சிலர் கூறுப. உண்மையானோக்குமிடத்து ஈசுவரப் பெயராற் கூறப்பட்டவர் சிவபெருமானே என்பது விளங்கும்; யாதினானெனின், † मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम् । ' எனச் சுருதி கூறுதலானென்க. இவ்வாறு சிவலிங்கபூபதி கூறுகிறார்.

இங்ஙனம் இந்நூலுரையால் அறிந்துகொள்ளக் கிடக்கும் விஷயங்கள் பல.

இவ்வரிய நூலை அதன் உரையுடன் வடமொழியிலே இலக்கண இலக்கியப் புலமையும் வேதவேதாங்க நூற் புலமையும் ஒருங்குடைய சிறந்த புலவர்களே பதிப்பித்தற்குத் தகுதியுடையார். அவ்விதப்புலமை சிறிதுமில்லாத யான் இதனைப் பதிப்பித்தல் கற்றுணர்ந்தோர் அனைவரும் நகையாடுதற் கேதுவாமென்பதனை யான் நன்கு உணர்வேன். ஆயினும் இதனை அச்சிடுதற்குக் காரணம் இல்லாது போகவில்லை. இவ்வரிய நூல் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளால் பலவிடத்தும் எடுத்தாளப்படுதலை அறிந்த

---

* பகவற்கீதை. கஅ. சுக, சுஉ.

† இம்மந்திரம் சிவஞானபாடியம் உ. உ. உரையிலும், சிவஞான சித்தியார் க. கஎ உரையிலும் சிவஞான சுவாமிகளால் எடுத்தாளப் பட்டது.

யான் அந்நூல் முழுவதும் படிக்கவேண்டுமென்று விரும்பினேன்: பல்லோரிடமும் பிரதிகிடைக்குமா வென்று வினவினேன். இந்நூல் இருக்கின்றதென்ற நல்லுரை தானும் அவர்களிடமிருந்து கிடைக்காமை யின், என் விருப்பம் நிறைவேறாது கிடந்தது. இந் நிலையில் வெந்து கரிந்த மரம் தளிர்ப்பதற்கு அமிர்த தாரை சொரிந்தது போலச் சிவபக்த சிரோமணியாகிய குளித்தலை பிரம ஸ்ரீ அரங்கசுவாமி ஐயரவர்கள் தமது கைம்மாறில்லாத பேரருளாலே தம்மிடமிருந்த இந் நூலின் அச்சுப்பிரதியை என் வேண்டுகோட்கிணங்கி எனக்கு உதவினார்கள். அதனை யான் கற்றதும், 'இதனை நம்மவர் கற்பாராயின் வேதத்தின் மெய்ப்பொருள் தெரிந்து சிவபெருமானிடம் மெய்யன்பு செய்து சிவா னந்தப் பெருவாழ்வை யடைவார்களே இந்நூல் கிடைக்கப் பெறாக் குறையை நீக்கல்வேண்டும்' என்ற எண்ணமுடையவனாயினேன். இவ்வெண்ணத்திலே சில காலங் கழிந்தது. பின்னர்த் தமிழ் மொழி யையும் சைவ சமயத்தையும் ஓங்கச் செய்வதுகருதித் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகத்தை நிலையிட்டவர்களும் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களுமாகிய காலஞ்சென்ற அமைச்சர் திருவாளர் மா. திரவியம்பிள்ளையவர்க ளிடமும், அவர்களுக்கு உற்ற துணையாய் விளங்கும் அமைச்சர் திருவாளர் வ. திருவரங்கம்பிள்ளையவர்க ளிடமும், கழகத்தலைவர் திருவாளர் மா. நெல்லையப்ப பிள்ளை யவர்களிடமும் இந்நூலின் பெருமையையும்

உரையின் அருமையையும் யான் எடுத்துக்கூறி இந் நூலை அச்சிட்டுப்பேணுதல் இன்றியமையாததென்று தெரிவித்தேன். அப்பெரியோர்கள் மூவரும் யான் கூறியதற்கு இணங்கி இந்நூலை அச்சிட்டுச் சைவ வுலகிற்கு உதவுகின்றார்கள்.

தமது பிரதியைப் பொதுநலங்கருதி உபகரித்த சிவபக்த சிரோமணி பிரமஸ்ரீ குளித்தலை அரங்கசுவாமி ஐயரவர்கட்கும், அதனை அச்சிட்டுதவிய திருநெல் வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழ கத்தார்க்கும், அச்சிடுதற்கண் துணைபுரிந்த சம்ஸ்கிருத வித்துவான் காலஞ்சென்ற உபயவேதாந்த ஸ்ரீ ஐயபுரி கிருஷ்ணமாசாரியர் முதலிய நண்பர்களுக்கும் யான் எனது நன்றியைத் தெரிவிக்கின்றேன.

சைவ நன் மக்களனைவரும் இந்நூலைக் குற்றங் களைந்து குறைபெய்து வாசித்து உண்மைப்பொருள் தெரிந்து பேரானந்தப்பெருவாழ் வடையும்பொருட்டு ஸ்ரீ காந்திமதியம்பா சமேத சாலிவாடீசப் பெருமா னுடைய திருவடித்தாமரைகளை வணங்குகின்றேன்.

| | |
|---|---|
| இந்துகலாசாலை,<br>திருநெல்வேலி,<br>௧௨. ௩. ௭௯௨௨ | வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை,<br>தமிழ்ப் போதகாசிரியர். |

திருச்சிற்றம்பலம்

# அரதத்தாசாரியர் சரித்திரம்

பாவுபுகழ்ச் சோணாட்டிற் பலாசவனத் தமர்ந்துயிர்கட்
கிருளடருந் துயரொழிப்பா னெல்லையிலா தெழுந்தபெருங்
கருணைதிரு வடிவான கற்பகநா யகியொருபான்
மருவவளர் அக்கினீச் சுரன்மலர்த்தா ளிணைபோற்றி.

சோழநாட்டிலே காவேரியாற்றின் வடகரையிலேயுள்ள கஞ்சனூரிலே பிராமண குலத்திலே காசியப கோத்திரத்திலே சிருங்கிவாசுதேவ ரென்பவர் ஒருவர் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்குமுன் இருந்தனர். அவர் பாஞ்சராத்திரக் கொள்கைகளிலும் ஆசாரங்களிலும் மிகுந்த பற்றுடையவர். தமது நெற்றியில் வெள்ளைமண்ணும் மஞ்சட்பொடியுங்கொண்டு ஊர்த்துவ புண்டரம் அணிபவர். அவர் தமக்கோராண்மகப்பேறு கிடைத்தல் வேண்டுமென விரும்பித் திருமாலை நோக்கிக் கடுந்தவம் புரிந்தனர். அவரது தவத்தின் பயனாக ஐந்துகோள்கள் தத்தம் வீடுகளிலே உச்சத்தை யடைந்த பொழுது ஒரு திருப்புதல்வர் பிறந்தருளினார். வாசுதேவர் அப்புதல்வருக்குச் செய்யவேண்டிய சாதகன்ம முதலிய சடங்குகளை உரிய காலங்களிலேசெய்து அவ்வரும்பெறற் குழந்தை

யாருக்குச் சுதரிசன ரெனப் பெயரிட்டனர். சுதரிசன ரும் தம்பெற்ருேர் மனமகிழுமாறு பருவங்கடோறும் இளம்பருவ விளையாடல்களைச் செய்பவர் தாம் மண் விளையாட்டயர்கின்ற காலத்திலே சிவனடியார் திரு வடி பதிந்த இடத்திலுள்ள மண்கொண்டு விளையாடு வர். வாசுதேவர் இதனை அறிந்திலர். அவர் தம் புதல் வருக்கு நல்ல அணிகலங்கள் பூட்டியும் தூயமென் றுகில்கள் புனைந்தும் ஊர்த்துவ புண்டரம் அணிந்தும் பாராட்டி வளர்த்துவந்தார். சுதரிசனரும் மூவாண் டெய்தினர்.

அந்நாளிலே ஒரு நாள் அக்கஞ்சனூரில் வாழுஞ் சிவனடியாராகிய பசுபதியென்னும் அந்தணர் தெரு விற் செல்லச், சுதரிசனர் அவரை வணங்கித் தமக்குத் திருநீறும் உருத்திராக்கமுமாகிய சிவசின்னங்களைக் கொடுத்தருளுமாறு வேண்டினர். அவரும் சுதரிசன ரது பேரறிவிருந்தவாறு கண்டு மகிழ்ந்து அவருக் குத் திருநீறும் உருத்திராக்கமுங் கொடுத்தருளினர். சுதரிசனர் தமது நெற்றியி லணியப்பட்டிருந்த ஊர்த் துவ புண்டரத்தை யழித்துவிட்டுத் திருநீற்றை மெய்ம்முழுவதும் பூசி முக்குறியாகவும் அணிந்து உருத்திராக்கம் பூண்டு திருக்கோயில் சென்று அக் கினீசுவரப் பெருமானையும் கற்பகநாயகியாரையும் மெய்யன்புடன் வழிபட்டனர். இந்நிகழ்ச்சியறிந்த அந்நகர மாந்தர்கள் வியப்பெய்தினர்.

வாசுதேவர் தமது புதல்வருக்கு ஐந்தாவதாண்டு அணைந்த அளவிலே முந்நூல் அணிவித்தனர். அது

காறும் சுதரிசனர் செய்த செயல்களனைத்தும் இளம் பருவச் செயலெனக் கருதியிருந்த வாசுதேவர் ஒரு நாட் காலையில் அவரை யழைத்துக் 'குழந்தாய், நீ சிவாலயத்திற்குப் போகாதே: விபூதியணியாதே: உருத்திராக்கம் பூணுதே: சிவனடியாரோ டிணங்காதே: திருமாலின் திருவடித் தாமரைகளையே வழி படு' என்று அறிவுறுத்தினர். சுதரிசனர் தம் பிதா கூறியதொன்றையும் கேட்டிலர். அவர் வழக்கம்போலச் சிவசின்னந் தாங்கித் திருக்கோயில் சென்று அக்கினீசுவரப் பெருமானை வழிபட்டு வீட்டுக்கு வந்தனர். இதனை யறிந்த வாசுதேவர் சுதரிசனரைக் கயிற்றாற் கட்டி அடித்துத் தமது ஆசாரங்களை அறிவுறுத்தினர். சுதரிசனர் கட்டினின்று விடுபட்டதும் முன் போலச் சிவசின்னங்கள் தாங்கித் திருக்கோயில் சென்று அக்கினீசுவரப் பெருமானை நண்பகற் போதிலே வழிபடுவாராயினர். அதனையறிந்த தந்தையார் மிகவுஞ் சினங்கொண்டு தம்மனைவியாரை நோக்கி 'சுதரிசனன் என் சொற்படி நடக்கும்வரை நீ அவனுக்கு அன்னமிடாதே' என்று கூறிச் சென்றனர். சுதரிசனர் திருக்கோயிலினின்றும் வீட்டுக்குவந்து தமது தாயாரின் கைம்மலரைப்பற்றி, 'அம்மா! என்னைப் பசி மிகவும் வருத்துகின்றது; அன்னமிடுவாயாக' எனக்கூறி அழுதனர். அப்பொழுது தாயார் மனமிரங்கி 'அப்பா! உன் தந்தை நீ அவர் சொற்படி நடக்கும்வரை உனக்கு அன்னமிடல் கூடாதென்று கட்டளையிட்டிருக்கின்றனரே. நீயோ தந்தையின்

சொல்லைக் கேட்கின்றாயல்லையே. அவரே உனக்கும் எனக்கும் தெய்வம். நான் இப்பொழுது யாது செய்வது' என்று கூறிக் கண்ணீர் உகுத்தார். சுதரிசனர் மனம் பொறாது தம் வீட்டினீங்கித் திருக்கோயிலுக்குச் சென்றனர்.

சென்ற சுதரிசனர் அக்கினீசுவரப் பெருமானை மாலைப்பொழுதிலே வழிபட்டு 'என்னையுடையவரே, அடியேனுக்குத் தேவரீரே தந்தையார். உமையம்மையாரே தாயார். விநாயகக்கடவுளும் முருகப்பெருமானுமே உடன்பிறந்தோர்கள். உமது அடியார்களே எனது நண்பர்கள். அடியேன் உம்மை நினையாதிருப்பினும் தேவரீர் என்னைக் காத்துவருகின்றீர். தேவரிற் சிறந்த திருமாலும் நான்முகனும் உமது திருவடியையும் திருமுடியையும் அறிய முடியாது எய்த்தார்களென்றால் யானு உம்மை வழிபாடு செய்தற்குத் தகுதியுடையேன். எனக்கு உம்முடைய திருவடிகளே புகலிடம். தேவரீர் என்முன் எழுந்தருளல் வேண்டும். எனக்கு உம்மையன்றி வாழ்வில்லை. உம்மைக் காண்பதற்கே நான் ஆசைப்பட்டேன்' என்று கூறி இரந்தனர். பின்பு சுதரிசனர் தனியிடஞ் சார்ந்து தியான சமாதியிலிருப்ப, அன்றிரவிலே அடியார்க்கெளிவரும் கருணைவள்ளலாகிய சிவபெருமான் உபவீதம்போலத் தரித்தருளிய தூய ஆடையினையுந் திரிபுண்டரத்தினையுமுடையராய் வெளிநின்றருளிக் 'குழந்தாய்! நீ எதற்காக வருந்துகின்றாய். நிகழ்ந்தவற்றைக் கூறுக' என வினவியருளினர். சுதரி

சனர் பணிந்துநின்று 'எம்பெருமானே! தேவரீர் தாம் அனைத்தும் அறிவீரே' என்று தொடங்கித் தம்மீது தமது தந்தையாருக்கு உண்டாகிய சினத்தையும் அதன் காரணத்தையும் பணிந்து கூறினர். அதனைத் திருச்செவி சாத்திய பெருமான் சுதரிசனரது அன்பிருந்தவாறு கண்டு மனமகிழ்ந்து 'குழந்தாய்! உனக்கு வேண்டற்பாலது யாது? அதனைத் தருகின்றோம்' என்றருள் செய்தனர். சுதரிசனர் 'எம்பெருமானே! தேவரீர் காட்சியருளியபின் எனக்கு வேண்டத்தக்கது யாது? உம்முடைய திருவடியில் எனக்கு என்றும் மெய்யன்பு உண்டாவதொன்றே அடியேன் வேண்டுவது' என்று தெரிவித்தனர். சிவபெருமான் சுதரிசனரது வேண்டுகோளின் வண்ணம் 'நீ வேண்டியவற்றைக் கொடுத்தோம்' என்று திருவாய் மலர்ந்தருளி *அவருக்குப் படிகலிங்கமொன்று உதவி வேத சிவாகமங்களின்படி வழிபாட்டு முறையையும் உரைத்தருளி 'இனிமேல் உனதுபெயர் அரதத்த னென்று வழங்குவதாக' எனக்கூறிக், 'குழந்தாய்! நீ பசியால் மிகவும் களைப்புற்றிருக்கிறாய்: நமது அநுசரர் வாயிலாக உனக்குப் பாயசான்னந் தருகின்றோம். நீ அதனைப் பெற்று உண்டு உன் வீட்டுக்குச் செல்க' என்றருளிச் செய்து திருவுருக்கரந்தனர். அரதத்தர் சிவபெருமான் தமது அநுசரரால் கொடுத்தருளிய பாயசான்னத்தைப் பெற்று உண்டு சொப்பன சமா

---

* அரதத்தாசாரியர் பூசித்த சிவலிங்கம் தனியாகக் கஞ்சனூரிலே பிரதிட்டை செய்யப்பட்டிருக்கிறது.

தியோ யெனக்கருதி யோகிகளைப்போல உண்மை ஞானந் தெளிந்து மெய்யுணர்வுப் பிழம்பாய் விளங்கினர். அவ்வாறு விளங்கிய அரதத்தர் தமக்கு எளிவந்து காட்சி கொடுத்தருளிய சிவபெருமானை மறவாத சிந்தையோடு வீட்டுக்குச் சென்றனர்.

அரதத்தர் வீட்டிற்சென்று தமது தாயாரை அழைத்துக் கதவுதிறக்குமாறு வேண்டினர். அதனைக் கேட்ட வாசுதேவர் தமது புதல்வரியல்பினை யறியாதவராய் மிகவும் சினந்து 'நான் சொல்லியபடி நீ நடப்பதானல் உனக்கு உணவுகொடுப்பேன்: நீ வெள்ளேறு ஏறுவான் கோயிலுக்குப்போனல் உன் கால்களை வெட்டுவேன் : சிவனுக்குத் தொண்டு செய்யாதே' என்றிவ்வாறு பல பல கூறினர். அரதத்தர் தம் தந்தை கூறிய சிவநிந்தைகளைக் கேட்கப் பொறுதவராகிக் 'கௌதமர் ததீசி கண்ணுவர் உபமன்னியு திருநந்தி தேவர் என்பவர்களாற் சபிக்கப்பட்ட கூட்டத்தினருள் நீவிருஞ் சேர்ந்திருக்கின்றீராதலின், சிவபெருமானது பெருமையை அறியாது பல பல கூறுகின்றீர்: எம்பெருமானுடைய திருவருட்செயல்கள் பலவற்றையும் எடுத்துச் சொல்வதைவிட ஒரு காரணமட்டும் சொல்லி அப்பெருமானுடைய மேம்பாட்டினை நிலை நிறுத்துகின்றேன்' என்று கூறித் தந்தையாரை நோக்கித் 'திருமால் சிவபெருமானைத் தமது விழித் தாமரையால் வழிபட்டனரோ அன்றோ? என வினவினர். இவ்வாறு வினவவும் வாசுதேவர், தாம் பரமப் பிரமாணமெனக்கொண்ட திருவாய் மொழியி

னும்* இச்செய்தி கூறப்பட்டிருப்பதால் யாதும் விடை கூற இயலாது சிறிதுநேரந் திகைத்துப் பின்னர் அவ்வாறு திருமால் வழிபட்டது உலகினை வஞ்சித்தற் பொருட்டன்றி உண்மைபற்றி யன்றென விடை பகர்ந்தனர். அரதத்தர் வாசுதேவரை நோக்கித் 'திருமாலின் முழுமுதற் றன்மையை வேதாகம முறைப்படி பேசுக' எனச் சொல்லத் தந்தையாரும் தாம் அறிந்த முறையிற் பேசினர். அரதத்தர் தந்தை கூறியவை அனைத்தையும் வேத முதலிய பிரபல பிரமாணங்களால் மறுத்தனர். வாசுதேவருக்கு இச்சமயத்தில் தாம் முன்பு உண்மையெனக் கொண்டிருந்த பாஞ்சராத்திரக் கோட்பாடுகளில் ஐயுறவு தோன்றியது.

இவ்வளவில் வாசுதேவரது அகவிருளும் புறவிருளும் நீங்கும் வைகறைப் பொழுதாயிற்று. தந்தையார்க்கும் மைந்தர்க்கும் நிகழும் விவாதம் அறிந்த பலரும் ஒருங்கு திரண்டார்கள். செங்கதிர்க் கடவுளும் இவ்வரிய வாத நிகழ்ச்சியைக் காணவிரும்பி ஏழ்பரி பூட்டிய தனது ஒற்றையாழித் தேரிலேறி விரைய வந்தான். பெருந்திரளான சிவனடியார்களும் வைணவர்களும் அங்கே கூடினார்கள். அப்பொழுது அக்கூட்டத்திலே யிருந்த அறிவான் முதிர்ந்தோரி லொருவர் ஏனை அனைவரையும் கையமைத்துச் 'சாத்

* 'சக்கர்வா னச்சடையோன் சேவடிக்கீ ழந்நாளின், மெய்க்கணிட்டுச் சக்கரநீ பெற்றவிளை யாட்டேபோல்' என்பது திருவாய்மொழி. இச்செய்யுட்பகுதி அச்சிட்ட பிரதிகளிற் காணப்பட்டிலது.

திர முறையாய்ச் செய்யும் வாதத்தின் வெற்றி தோல்விகளை அறிஞர்களே யறிவர்: ஆதலின் அறிவிற் குறைந்தாருட்பட அனைவரும் உண்மை தேறும் பொருட்டு ஏதேனும் அற்புதமொன்றாற் சிவபெருமானது மேன்மை விளக்கிக் காட்டப்படல் வேண்டு' மென்று கூறினர். அரதத்தரும் அவ்வாறு செய்தற்குத் திருவருளிருந்தபடியை உணர்ந்து 'ஓம்' என்று கூறி உடம்பட்டனர். உடனே வைணவர்கள் அரதத்தரை நோக்கி 'நீவிர் பழுக்கக் காய்ச்சிய இருப்பு முக்காலியிலிருந்து உமது சிவபெருமானுடைய மேன்மையை வேதப்பிரமாணங்களுடன் கூறுக' என்றனர். அரதத்தரும் அதற்கிணங்கினர். அப்பொழுது சிவனடியார்கள் 'நமது அக்கினீசுவரப் பெருமானுடைய திருக்கோயிலிலே அக்கினீசுவரப் பெருமானுக்கும் நந்திபிரானுக்கும் நடுவே இதற்கு வேண்டுவன அமைப்போம்' என்றனர். வைணவர்கள் 'நாங்கள் எக்காரணத்தாலும் சிவன் கோயிலுள் நுழையோம். எங்கள் வரதராஜ சுவாமி ஆலயத்தில் வரதராஜப் பெருமானுக்கும் கருடனுக்கும் நடுவே பழுக்கக் காய்ச்சிய இருப்பு முக்காலியிலிருந்து இச்சிறுவன் சிவனுடைய முழுமுதற் றன்மையை நிலை நிறுத்துவானாக' என்றனர். அரதத்தர் அதற்கும் இசைந்தார்.

வைணவர்கள் தாம் முற்கூறியபடி வரதராஜப் பெருமானுக்கும் கருடனுக்கும் நடுவே இருப்பு முக்காலியை இட்டனர். அரதத்தர் சிறிதுங் காலந்தாழ்க்காது வரதராஜப் பெருமானை வணங்கித் 'தேவ

தேவரே, உலகத்தைக் காப்பவரே, சிவபெருமானது திருவடித் தாமரைகள் மலரும் உள்ளப் பொய்கை யுடையவரே, சிவவழிபாட்டி னீங்காதவரே, சிவனடி யாருட் சிறந்தவரே, திருமாலே, சிறியேன் உமது அடைக்கலம். யான் உபநிடதங்களின் மெய்ப் பொருளை நிலைநிறுத்தப் போகின்றேன். உமது திரு முன்பு இடப்பட்ட இவ்விருப்பு முக்காலி தண்ணீர் போற் குளிர்ச்சி யடைவதாக' என வேண்டிக்கொண்டு வெளிப்போந்து, உமையமர்ந்து விளங்கும் இடப் பாகத்தையுடைய சிவபெருமானை மனத்தில் நினைத் துப் பழுக்கக் காய்ச்சிய இருப்பு முக்காலியை வலம் வந்து அதன் மீதேறி யிருந்தனர். அவ்விருப்பு முக் காலி சமணரிட்ட நீற்றறை திருநாவுக்கரசு நாயனா ருக்கு ஆயினவாறு போல மூசுவண்டறை பொய்கை போன்று குளிர்ந்தது. ஞானபாநுவாகிய அரதத்தா சாரியர் அம்முக்காலியி லிருந்தவாறே வைணவர்கள் உள்ளத்தைப் பொதிந்திருந்த அறியாமை யிருள் நீங்க வும் சிவனடியார்கள் உள்ளத்தில் மெய்யன்புத் தாமரை மலரவும் சுருதி சூக்தி மாலை யென்னும் அரிய நூலை அருளிச் செய்தனர். அன்றியும் சிவபெரு மானது முதன்மையை யாவரும் எளிதின் உணர்ந்து கொள்ளும் பொருட்டுக் 'காயத்ரி வல்லபத்வாத்' என்று தொடங்கும் *பஞ்சரத்தின மாலிகையையும்

---

*இப்பஞ்சரத்தின மாலிகையினை ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள் சிவஞானபாடியத்தில் முதற் சூத்திரத்து இரண் டாவது அதிகரணவுரையில் மொழிபெயர்த்தருளினார்கள்.

'விஷ்ணு வாத்யாச்ச' என்று தொடங்கும் தசசுலோகி யினையும் அரதத்தாசாரியர் அருளிச் செய்தனர். மேலும் சிவபெருமான் திருமாலென்னு மிருவரையுங் குறித்துப் பெரும்பான்மை புராணங்களிலும் இதி காசங்களிலுங் கூறப்பட்ட வரலாறுகளையும் சிறு பான்மை வேதத்திற் கூறப்பட்ட பெருமையையும் ஒப்புநோக்கி அரிகரதார தம்மியம் என்னும் நூலையும் அருளிச் செய்தனர். அவ்வளவிலே இருப்பு முக்காலி முத்துச் சிவிகையாக வைணவ சமயத்தை நிராகரித் தற்கு அதிலெழுந்தருளியிருந்த அரதத்தாசாரியர் சமணசமயத்தை நிராகரித்தற்கு முத்துச் சிவிகையி லெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்த சுவாமிகள் போன்று விளங்கினர். இவ்வற்புதத்தைக் கண்ட அனைவரும் அரதத்தாசாரியர் சிவபெருமானே யெனக் கொண்டு அவரது திருவடிகளில் விழுந்து வணங்கி னர். அப்பொழுது தந்தையாராகிய வாசுதேவர் தமது புதல்வர் சிவபெருமானருளாற் செய்த அற்புதத்தையும் அவரது அருண்மொழியின் வன் மையும் உணர்ந்து புதல்வரை வணங்கித் தாம் அறியாமையாற் செய்த குற்றங்க ளனைத்தையும் பொறுத்துத் தமக்குத் திருநீறு அருளி ஐந்தெழுத் துண்மை அறிவித்துச் சிவபெருமான் திருவருட்பேறு கிடைத்தற்கு அருள் செய்ய வேண்டுமென்று குறை யிரந்தனர். ஏனைய வைணவர்களும் அவ்வாறு வணங்கி வேண்டினர். அரதத்தாசாரியர் 'உடம் பிலே தப்த முத்திரைகளாகிய சங்கு சக்கரங்களை

யணிந்த உங்கட்கு வேதத்திலே கூறப்பட்ட திருநீ றணிதலே கழுவாயாகும்' என்று சொல்லித் தந்தையா ருள்ளிட்ட அனைவருக்கும் திருநீறருளித் திருவுருத் திராக்கம் அணிவித்து ஐந்தெழுத் தறிவித்துச் சிவ பூசை யெழுந்தருளிக் கொடுத்துப் பூசாவிதியும் அருளினர். ஆசாரிய சுவாமிகளது தாயார் இச் செய்திகளைக் கேட்டு அவர்பா லணைந்து அவரைத் தழுவி உச்சிமோந்து துன்பமொருபாலும் பெரு மகிழ்ச்சி யொருபாலும் அலைப்பக் கண்ணீர் வார்ந்து, 'என் ஐயனே! நீ பசியால் வருந்தினாய். அமுதருந்து மாறு வீட்டுக்கு வருக' என்று அழைத்தனர். ஆசா ரியர் அதற்கிணங்கி வீடு சென்று சிவபெருமானைச் சிந்தித்துக் கொண்டிருந்து சிவநிவேதனத்தை அருந் தினர். அன்று முதலாகக் கஞ்சனூரிலும் அதனை யடுத்த பலவூர்களிலு முள்ள வைணவர்கள் அனைவரும் சைவர்களாகிச் சிவபூசா துரந்தரர்களாய் விளங்கினார் கள். அவ்வூர்களும் பூலோக சிவலோகமெனப் பொலிந்தன.

இங்ஙனம் அரதத்தாசாரியர் குழந்தைப் பருவத் திற்றானே சிவபெருமானாற் பாயசான்னம் அருளப் பெற்றமையும் சைவசித்தாந்த ஆசாரியராய் விளங்கி வைணவர்களால் இடப்பட்டதும் பழுக்கக் காய்ந்தது மாகிய இருப்பு முக்காலியிலிருந்து சைவத்தை நிலை நிறுத்தியதும் அந்நாட்டு அரசராகிய சிவலிங்கபூபதி யென்னும் வேந்தர் கேள்வியுற்று, மந்திரி முதலா யினோர் புடைசூழ நாற்படையுடன் கஞ்சனூரடைந்து

ஆசாரியருடைய திருவடிகளில் விழுந்து வணங்கிப் 'பாண்டிமன்னனாகிய என்னைக் காத்தற் பொருட்டு என் குலதெய்வமாகிய சோமசுந்தரப் பெருமானே இம்மூர்த்தியாய் இங்கெழுந்தருளினர்' என்று பாவி னார். அச்சமயத்தில் அரசர் முதலியோர் கேட்குமாறு சிவபெருமானது திருவருளினாலே அசரீரிவாக்குத் 'தனது தாமரைக் கண்ணினாலே நம்மை வழிப்பட்ட திருமாலே இப்பொழுது நமது திருவடிப் பத்தியை விளைவித்துச் சிவநெறியைத் தழைப்பித்து உலகத்தை வாழ்விக்கப் பிறந்திருக்கின்றான்' என ஆகாயத்தில் எழுந்தது. அரசர் மிகவும் விம்மிதராகி ஆசாரியர் திரு வடிகளில் விழுந்து வணங்கித் தம்மை ஆட்கொள்ளு மாறு வேண்டினர். ஆசாரியரும் அரசரது பக்குவத் தை யறிந்து அவருக்கு ஐந்தெழுத்துபதேசம் புரிந்து சிவபூசை யெழுப்பண்ணிக் கொடுத்தனர். அரசர் ஆசாரியருக்குக் கையுறையாக அளவிறந்த பொன் னும் மணியுஞ் செலுத்தி விடைபெற்றுச் சென்றனர். ஆசாரியரும் பிரமசரிய நிலையை வழுவாது நடத்திச் சிவபூசை சிவத்தியான முதலியன செய்து வருவா ராயினர்.

இவ்வாறு பல ஆண்டுகள் கழிய, ஆசாரிய சுவாமி களுக்கு மணமுடிக்கும் பருவம் எய்தியது. அஃதறிந்த சிவலிங்கபூபால சோழர் கஞ்சனூர் சென்று ஆசாரி யரை வணங்கி அவரது தந்தையாரிடம் திருமண முடிக்குஞ் செய்தியைக் குறித்துப் பேசிய காலத் திலே, சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்தவரும்

சிவபெருமானை மறவாத சிந்தை யுடையவருமாகிய சுப்பிரதீகர் தமது அரும் பெறற் புதல்வியாராகிய கமலவல்லியாரை ஆசாரியருக்கு மணமுடித்துக் கொடுப்பதாகக் கூறினர். அனைவரும் அதற்கிசைந்த பின், அரசருடைய கட்டளையால் நகர முழுவதும் கமுகு வாழை முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டது. கஞ்சனூரிலே யுள்ளோ ரனைவரும் தத்தம் வீடுகளைக் கோலங்களாலும் தோரணம் கொடி முதலியவைகளா லும் அழகு செய்தார்கள். திருமணத்திற்கு வேண்டும் பொருள்கள் யாவும் சிவலிங்க பூபாலர் சேகரித்து அமைத்தனர். சோதிடர்கள் குறிப்பிட்ட நற்பொழு திலே அரதத்தாசாரியருக்கும் கமலவல்லியம்மை யாருக்கும் திருமணம் நடைபெற்றது. அது முதல் ஆசாரியர் தமது வாழ்க்கைத் துணையாராகிய கமலவல் லியாரோடு சிவாராதனை முதலியன சிறப்புறச் செய்து வந்தனர்.

ஒரு முழுமதி நாளிலே ஆசாரியர் காவேரியிலே நீராடி வந்து மாத்தியான்னிகஞ் செய்து சிவபூசை செய்யத் தொடங்கிச் சிவபெருமானுக்கு நீராட்டும் பொழுது ஒருநாய் பூசா மண்டபத்துட் புகுந்து நீர் வேட்கை மிகுதியால் அபிடேக நீரைக் குடிக்க விரும் பித் தன் நாவை நீட்டியது. உடனே ஆசாரியர் சங்கா பிடேக நீரை அந்த நாயின் நாவிலே வார்த்து எஞ்சிய நீரால் சிவபெருமானை அபிடேகித்தனர். அச்சமயம் அவ்விடத்திருந்தோர் சிலர் ஆசாரியரை நோக்கிச் 'சுவாமி, இவ்வாறு செய்தல் பொருந்துமா? அடியேங்

களுக்கு உண்மை யறிவித்தல் வேண்டும்' எனக் கேட்டனர். அப்பொழுது ஆசாரியர் 'சிவபெருமானே இவ்வடிவில் எழுந்தருளி வந்து கேட்கும் பொழுது யான் யாது செய்வேன்' என்று கூறியருளினர். அது கேட்ட அனைவரும் ஆசாரியர் சிவபெருமானிடம் வைத்த அயராவன்பின் திறத்தை யுன்னி மெய்ம் மயிர் சிலிர்த்து மகிழ்ந்தனர்.

ஆசாரியர் அங்ஙனம் சிவபூசை முடித்ததும் அக்கினீசுவரப் பெருமானை வழிபடும் பொருட்டுத் திருக்கோயிலுக்குச் சென்றனர். அங்கே கோயிலதிகாரிகள் கோயிற் பணிவிடை செய்யும் உருத்திர கணிகையரை முன்னைய இரவிலே பணிவிடை செய்ய வாராத குற்றத்திற்காக வெயிலிலே நிறுத்தி வருத்தினார்கள். இதனைத் தெரிந்த ஆசாரியர் தமது தலையிலும் வயிற்றிலும் பலமுறை புடைத்துக் கீழே விழுந்து மூர்ச்சித்தார். இதன் உண்மையை அறியாத சிலர் ஆசாரியரை நகைத்தனர். கோயிலதிகாரிகள் ஆசாரியரை யடைந்து 'சுவாமி, தேவரீர் எதற்காக இவ்வாறு வருந்துகின்றீர்கள்' என்று கேட்க, ஆசாரியர் 'திருக்கோயிலுக்கு வந்து சேவிக்குமாறு ஒறுக்கப்பட்ட இக்கணிகையர் செய்த தவமே தவம். இஃது அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதமாயிருக்கின்றதே. யான் இன்று பொழுது கழித்துச் சேவை செய்யவந்தேன். என்னை இவ்வாறு ஒறுக்க யாருமில்லையே யென்று வருந்துகின்றேன்' என்றனர். உடனே கோயிலதிகாரிகள் உருத்

திரகணிகையரை விடுவித்து ஆசாரியருடைய சிவபத்தியை வியந்து புகழ்ந்தனர். ஆசாரியர் முன்போல நியமமாகச் சிவாராதனஞ் செய்து வந்தனர்.

இங்ஙனம் நிகழும் நாளிலே கமல வல்லியம்மையார் திருவயிறு வாய்த்து ஓர் புதல்வரைப் பெற்றார். ஆசாரியர் அப்புதல்வருக்கு அக்கினீசுவரனென்று பெயரிட்டனர். அப்புதல்வருக்குப் பின்னர் மகாதேவர், நீலகண்டர், சங்கரர், சந்திரசேகரர், சம்பு, மத்தியார்ச்சுனேசுவரர், கோவடுநாயகரென்னும் எழு புதல்வர்களும் கற்பகை மீனாக்ஷி யென்னுமிரண்டு புதல்விகளும் பிறந்தார்கள். அக்குழந்தைகள் அனைவரும் திருநீறுங் கண்மணியுமாகிய சிவசின்னங்கள் அணிந்து ஐந்தெழுத்துருச் செய்பவர்களாய்ச் சிவபூசை புரிபவர்களாய்த் தந்தையாராணைவழி நிற்பவர்களாய் விளங்கினார்கள்.

ஒரு கால் சிவலிங்கபூபதி அக்கினீசுவரப் பெருமானுக்குச் சாத்தும் பொருட்டு விலையுயர்ந்த பட்டாடை யொன்றனை ஓரந்தணர் வாயிலாக ஆசாரியரிடம் விடுத்தனர். அவ்வந்தணர் பட்டாடையைக் கொண்டுவந்து ஆசாரியரிடம் சேர்க்குங் காலம் ஆசாரியர் சிவாக்கினியில் ஓமஞ் செய்யுஞ் சமயமாயிருந்தது. அந்தணர் ஆசாரியரை வணங்கி 'அரசர் இதனை அக்கினீசுவரப் பெருமானுக்குச் சாத்தும்பொருட்டு விடுத்தனர்' என்று விண்ணப்பித்துப் பட்டாடையைக் கொடுத்தனர். ஆசாரியர் அதனை வாங்கி அக்கினீசுவரப் பெருமானைச் சிந்

தித்து அவ்வக்கினியில் ஆகுதி செய்தனர். அவ்வாடை நொடிப் பொழுதில் சாம்பராயிற்று. அது கண்ட அந்தணர் வியப்புற்றாராயினும் ஆசாரியர்பால் வினவுதற்கு அஞ்சினவராய் விடைபெற்றுப் போய் அரசவையடைந்து நிகழ்ந்த செய்தியைக் கூறினர். அரசர் 'நம் ஆசாரியர் அவ்வாறு செய்தற்குக் காரணமென்னோ? இதனுண்மையை அறியவேண்டும்' என்று கருதி, ஆசாரியரை யடைந்து வணங்கிச் 'சுவாமீ, அடியேன் விடுத்த பட்டாடை அக்கினீசுவரப் பெருமானுக்குச் சாத்தியாயிற்றா?' என, ஆசாரியர் 'ஆம்' என்றுகூறி, அரசனைத் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று அப்பட்டாடை சாத்தியிருப்பதைக் காட்டினர். அரசர் ஆசாரியரது பெருமையைத் தெளிந்து, தாம் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டினர். ஆசாரியர் அரசருக்குச் சிவபெருமான் றிருவடிப்பத்தி நிலைநிற்குமா றருள்புரிந்தனர். அரசர் விடைபெற்று மீண்டனர்.

பின்பு ஒருநாள் கஞ்சனூரிலே அந்தணனொருவன் வைக்கோற்கட்டினைத் தொழுவத்தின் உட்புறம் இடும்பொழுது உட்புறம் அவனுக்குப் புலப்படாமையால் அவ்வைக்கோற் கட்டு அங்குக் கட்டப்பட்டிருந்த இளங்கன்றின்மீதுபட அஃதிறந்தது. அதனையறிந்த அவ்வூரந்தணர்கள் அவனைப் பசுக்கொலை புரிந்தானென்றிகழ்ந்து ஊரினின்றகலுமாறு வற்புறுத்தினர். அவ்வந்தணன் 'அறியாமையான் இக்கொலை நிகழ்ந்ததே. யான் யாது கழுவாய் செய்வேன். ஊரார்

இவ்வாறு இகழுகின்றனரே' என்று மிகமனம்வருந்தி அறிவழிந்து பேய்க்கோட்பட்டவன்போ லாயினன். அவனுக்குத் திருவருள் வலத்தால் அக்கினிசுவரப் பெருமானது திருக்கோயிலை வலம்வரும் பேறுகிடைத்தது. அதனால் அவன் மனஞ் சிறிது தெளிவடைந்து 'நான் அரதத்தாசாரியரை அடைந்தால் அவர் இதற்குத்தீர்வு அருளிச் செய்வர்' என்றெண்ணி அங்கே சென்றான். அவன் ஆசாரியர் வீட்டினுட் புகும்பொழுது தலைவாயில் தன் தலையி லிடித்தலின் அவன் 'சிவ சிவ' என்று சொல்லிக் கீழே யிருந்தான். சிவ நாமங் கேட்ட ஆசாரியர் 'யாவரோ சிவனடியார் வாயிலில் வந்தனர்' என்று தெரிந்து ஓடி வந்து முகமன் கூறி அவனை யழைத்துச் சென்றனர். அப்பொழுது அவ்வந்தணன் 'சுவாமி, அடியேன் அறியாமையால் பசுக் கொலை புரிந்துவிட்டேன் என்னைக் கடைக்கணித் தருளல்வேண்டும்' என்று தெரிவித்து வணங்கினன். ஆசாரியர் அவனை நோக்கி 'நீர் செய்த பசுக்கொலைக்குத் தீர்வு முன்னமேயாயிற்று. உமக்கு வீடும் கிடைத்து விட்டது' என்றனர். அந்தணன் அது கேட்டு வியப்புற்றுநின்றான். ஆசாரியர் *நீர் முதலிற்கூறிய சிவச் சொல்லால் நீர் செய்த பாவம் நீங்கிற்று. இரண்டாவது கூறிய சிவச்சொல்லால் முத்தி கிடைத்து' என்று கூறியருள, அந்தணன் பேரானந்த முற்றனன். இவ்வனைத்தையும்

* 'விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணிய புகிலவை யொன்று மில்லையாற், பண்ணிய வுலகினிற்

கண்டு நின்ற ஒருவன் ஆசாரியர் கூறியவற்றை நம்பாது வீண் வழக்குச் செய்ய ஆசாரியர் 'சிவநாமத்தின் பெருமையறியாத வுன்னைப் பார்த்தலும் பெருங் குற்றம்' என்று சொல்லி விடுத்து, அவ்வந்தணனை நோக்கி 'நீர் சிவபெருமான்றிருப்பெயர்களை உரக்கச் சொல்லிக் கொண்டிரும்' என்றருளிச்செய்து விடுத்தனர். அவனும் அவ்வாறே ஆனந்தமேலீட்டால் 'என்பாவம் ஒழிந்தது ஆசாரியர் திருவருளால் என் பாவம் ஒழிந்தது' என்று பலமுறை சொல்லிக்கொண்டு போம்பொழுது சிலர் அவனை நோக்கி 'நீ கூறியதை யாங்கள் உண்மையெனக் கொள்ளோம்; அக்கினீசுவரப் பெருமான் றிருக்கோயிலிலுள்ள விடைத்தேவர் நீ கொடுக்கும் புல்லை யுண்பாராயின், யாங்

---

பயின்ற பாவத்தை, நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே' திருநாவுக்கரசு. நமச்சிவாயப்பதிகம். பண் காந்தாரம் ௩.

'அபிவாயச்சண்டாலச் சிவ இதிவாசம் வதேத் தேந ஸஹஸம்வதேத் தேநஸஹஸம்வதேத் தேநஸஹபுஞ்ஜீத' என்பது ழண்டகோபநிடதம்.

'சிவனெனுமொழியைக் கொடிய சண்டாளன்
செப்பிடினவனொடு முறைக
வவனொடு கலந்து பேசுகவவனோ
டருகிருந் துண்ணுகவென்னு
முவமையில் சுருதிப்பொருடனை நம்பா
ஆமரோடுடன்பயில் கொடியோ
னிவனெனக் கழித்தாலையனே கதிவே
றெனக்கிலை கலைசையாண்டகையே'

என்பது சிவஞான சுவாமிகள் திருவாக்கு.

கள் அதனை மெய்யெனக் கொள்வோம் ' என்றனர். அந்தணன் ஆசாரியர்பாற் சென்று அதனைத் தெரிவித்து ஆசாரியர் அருளியவாறு அறுகம்புல்லைப் பறித்து விடைத்தேவர்பாற் சென்று 'சுவாமீ, என் பாவமனைத்தும் சிவநாமத்தால் நீங்கியது உண்மையாயின் இதனை ஏற்று உண்க' என்று வேண்ட, விடைத்தேவர் தமது நாவினை நீட்டி வலப்பக்கமாக வளைத்து அதனை வாங்கி யுண்டனர். இந்நிகழ்ச்சியைக் கண்ட அனைவரும் சிவநாமத்தின் சிறப்பும் ஆசாரியரது பெருமையும் அறிந்து மகிழ்ந்தனர்.

கஞ்சனூரிலே சதாசிவரென்னும் அந்தணரொருவர் மிகவும் வறியவராயிருந்தார். அவர் தமது வறுமை நீங்குவதற்கு உபாயம் யாதென்று நூல்களில் வல்ல பெரியோர்களிடம் கேட்ப அவர்கள் 'நூல்கள் விதித்த சிறந்த தானங்களைச் சற்பாத்திரர்களாகிய அந்தணர்களுக்கு இயன்ற அளவு கொடுப்பின் வறுமை நீங்கும் ' என்றனர். சதாசிவர் அரதத்தாசாரியரினுஞ் சிறந்த சற்பாத்திரர் யாருமிலரென்று துணிந்து அவரையடுத்துத் தமது வீட்டுக்குத் திருவமுதுகொள்ள எழுந்தருளவேண்டுமென்று குறையிரந்தனர்: ஆசாரியரும் உடம்பட்டுச் சதாசிவர் வீட்டுக்குச் செல்லச் சதாசிவர் உபசாரஞ் செய்து ஆசாரியருக்கு நல்ல விருந்தளித்தனர். விருந்து முடிந்ததும் சதாசிவர் ஆசாரியரை நோக்கிச் 'சுவாமீ, நான் வறுமையால் மிகவும் துன்புறுகின்றேன். எனக்கு அருள்புரியவேண்டும்' என்ன,

ஆசாரியர் அவர்க்கு ஆசி கூறித் திருநீற்றுக்காப்பு அளித்தருளித் தமதில்லஞ் சென்றனர். சென்ற அப்பொழுதே அரசர்பிரான் சதாசிவரை அழைத்து வருமாறு ஏவலாளை விடுப்பச் சதாசிவர் 'அரசர்க்கு யான் தீங்கு யாதுஞ் செய்திலேனே! எனக்கு யாது தண்டம் வருமோ!' என்ற அச்சங் கொண்டவராய் அரசர் திருமுன்பு சென்றார். அரசர் அவரை அருச்சித்து வணங்கிப் பட்டாடை பொன் பசு விளைநில முதலியன கொடுத்து விடுத்தனர். சதாசிவர் ஆசாரியரது பெருமையும் சற்பாத்திரதானத்தால் வரும் பயனும் அறிந்து மகிழ்சிறந்து வாழ்ந்தனர்.

ஒரு சமயம் ஆசாரியருடைய தாயார் சிவநிவேதனத்தின் பொருட்டுப் பசுபதியென்னும் அந்தணரிடம் பதக்கு நெல்லைப் பெற்றுக் காயவைத்திருந்தார். தெருவிலே சென்றுகொண்டிருந்த ஓர் எருது அதனை உண்ணத் தொடங்கியது. அருகிலிருந்த ஆசாரியர் அவ்வெருத்தின் பக்கம் சென்று நெல்லைக் கூட்டிக் குவித்து அதனை உண்பித்துக்கொண் டிருந்தனர். அது கண்ட தாயார் சினங்கொண்டு அவ்வெருத்தைக் கோலினாற் புடைத்து ஓட்டினார். ஆசாரியர் இந் நிகழ்ச்சிக்கு மனம்வருந்தியிருக்குமளவிலே சிவலிங்க பூபதியால் விடுக்கப்பட்ட தூதர்கள் வந்து ஆசாரியரை வணங்கிச் 'சுவாமீ, அரசர் தங்கட்கு நானூறு அரிசிப் பொதிகள் விடுத்தனர். அவற்றுள் இருநூறு பொதிகளை ஆற்றுவெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. மிகுதி இருநூறு பொதிகளும்

இங்கே வந்திருக்கின்றன. அவற்றை ஏற்று அருளல் வேண்டும்' என்று விண்ணப்பித்தனர். ஆசாரியர் அதனைக் கேட்டுத் தமது தாயாரை அழைத்து 'அம்மே, நீ எருத்தை நெல் உண்ணுது அடித்து ஓட்டிய தீச் செயலின் பயனை அறிந்தனையா' என்றனர். உண்மை யுணர்ந்த தாயார் மிகவும் மனம் வருந்தினர்.

ஆசாரியருடைய மனைவியார் ஒரு நாள் திருவமுது அமைத்தற் பொருட்டு அரிசி களையும் பொழுது அடுப்பில் நெருப்பு அவிய அதனைப் பெருக்கச் சென்றனர். அவ்வளவில் ஒரு நாய் வீட்டினுள் நுழைந்து அவ்வரிசியைத் தின்றது. மனைவியார் அது கண்டு அடுக்களையி லிருந்தவாறே அரிவாளை யெடுத்து அதன்மீது வீசி யெறிந்தனர். அது நாயின்மேற் பட்டுக் கழுத்தை வெட்டிவிட நாய் மூர்ச்சித்து விழுந்தது. மனைவியார் 'அறியாமையால் இப்பாவம் விளைந்ததே' யென்று புலம்பி வருந்தி, அதற்குக் கழுவாயாக ஐந்தெழுத் தோதிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் ஆசாரியர் வந்து நாய் மூர்ச்சித்துக் கிடப்பது கண்டு, நிகழ்ந்தவற்றைத் தெரிந்து மனைவியாரை நோக்கி 'நீ வாயிற் கதவைத் தாழிட்டு வையாத குற்றத்தாலே இது நிகழ்ந்தது' என்று கடிந்து சொல்லி, அந்நாயைத் தமது மடியிலே எடுத்து வைத்து அதனுடல் முழுவதும் திருநீறு பூசி உருத்திராக்கம் அணிந்து அதற்கு ஐந்தெழுத்து உபதேசித்தனர். அவ்வளவிலே வானினின்று விமான

மொன்று இழிய நாய் தன் பூதவுடம்பு நீத்துத்தெய்வ வடிவு பெற்று அதிலேறிக் கைலை சென்றது. இஃ தறிந்த அவ்வூரார் மிகவும் வியப்புற்றார்கள்.

ஒரு நாள் ஆசாரியர் தமது தாயாரும் மனைவி யாருஞ் செய்த தீய செயல்களுக்கு வருந்தி இவற்றிற் குக் கழுவாய் யாதென்று சிந்தித்து ஓர் ஓலை முறியிலே,

'ஜ்ஞாநாஜ்ஞாநப்ரயுக்தாநாம்
பாபாநாம் மஹதாமபி|'

(அறிவுட னகமற் றறிவின் றாகவிங்
குறுபிழை யொருவன்றா னுஞற் றுமாயிடின்)

என்று முற்பாதிச் செய்யுளை யெழுதித் தமது வீட் டில் ஓரிடத்தில் வைத்துவிட்டுக் காவேரியில் நீராடச் சென்றனர். அப்பொழுது கருணைக் கடலாகிய அக் கினீசுவரப் பெருமான் ஆசாரியர் வடிவங்கொண்டு வீட்டுக்கு வந்து ஆசாரியரது மனைவியார் வாயிலாக அவ்வோலை முறியைப் பெற்று,

'ஏகாந்த நிஷ்க்ருதிச் சம்போஸ்
ஸக்ருதேவ ஹி கீர்தநாத்||'

(செறிபவ நீங்கிடச் சிவன்ற னமமே
மறைவிடத் திருந்தன்பின் வழுத்து கென்பவே)

என்று பிற்பாதிச் செய்யுளை யெழுதி ஆசாரியரது மனைவியாரிடம் கொடுத்துப் பண்டுபோல் அவ்விடத் தில் வைக்கச் சொல்லி அகன்றனர். ஆசாரியர் நீராடி

வந்து சிவபூசை முடித்துத் திருவமுது கொண்டு ஓலை முறியை எடுத்துப்பார்க்கும்பொழுது செய்யுண் முடிவு பெற்றிருப்பது கண்டு தம் மனைவியாரை அழைத்து 'ஏடீ, இவ்வோலையை நீ யாரிடம் கொடுத்தனை' என்றுவினவ, மனைவியார் 'நீராடச்சென்ற தாங்களே மீளவந்து அதனை வாங்கி எழுதித் தந்து போயினீர்கள்' என்றுகூற அக்கினீசுவரப் பெருமானே தாம் நினைத்தபடி இவ்வாறு எழுதிச் சென்றன ரென்று தெளிந்து சிவநாமத்தின் பெருமையையும் சிவபெருமானது சௌலப்பியத் தன்மையையும் சிந்தித்து ஆனந்தக் கடலிலாழ்ந்தனர்.

ஒரு நாள் ஆசாரியர் வைசுவதேவ முடித்து விருந்தினரை எதிர்பார்த்தபொழுது ஒரு சிவனடியார் வந்தணைந்தார். ஆசாரியர் அவ்வடியாரை அன்புடன் வணங்கி எதிர்கொண் டழைத்து அறுசுவையோடு நால்வகை யுண்டியையும் அருத்தினர். அவ்வடியார் ஆசாரியர் செய்யும் உபாசாரங்கட்கு மிகவும் மனமகிழ்ந்து 'சுவாமீ, தாங்கள் செய்யும் உபசாரம் அரச வுபசாரமாயிருக்கின்றதே. தங்களுக்கு விளைநில முதலியன மிகுதியாக இருக்கின்றனவா?' என்று வினவினார். ஆசாரியர்,

'அஸ்த்யேவ ந: க்ஷேத்ரமக்ருஷ்டபச்ய
மநர்க பாகத் விதயோப பந்நம்।
உப்தௌஷதீசாம்குரமுந்நதீக
முத்யத்ஸதாபோகமுபாதி சூந்யம்॥'

4

(ஏர்வளம் பெறுத தில் கிறையி ருதது
நீர்வளம் வாய்மடா நிறைந்த தண்புனற்
போர்வள முடையது போக மொன்றினுற்
சீர்வள மறுதடுதஞ் சிறந்த பூமியே)

என்றருளிச்செய்தனர். அதுகேட்ட அடியார் ஆசாரி யரது சிவானுபவ நிலையை யுணர்ந்து வியப்பும் அன்புமுடையவராய் ஆசாரியர்பாற் பல நல்லுபதே சங்கள் கேட்டு வணங்கி விடைபெற்றுச் சென்ருர்.

ஒரு கால் ஆசாரியர் பிரமயாகத்தின் பொருட் டுக் காவேரிக்குச் சென்றனர். அங்கே ஒரு புலைச்சி 'இக்காவேரி தன்னிடம் நீராடினோர் தன்னைக் கண் டோர் இவர்கள் பாவங்களைப் போக்குங் கடவுட் டன்மையுடையவள். ஆதலின் நான் போய்த் தீர்த் தத்தைத் தலையிற்றெளித்து வருகிறேன்' என்று தன் கணவனிடஞ் சொல்லிப் போகத் தொடங்கினுள். அப்பொழுது கணவன் 'ஏடீ, இக்காவேரியிற் கிடக் கும் ஒவ்வோர் மணலும் ஒவ்வோர் சிவலிங்க மாயிற்றே. ஆதலின் நாம் அதனைப் பரிசித்தலாகாது' என்று சொல்லி அவளைத் தடுத்தான். இதனைக் கண்ட ஆசாரியர் 'எல்லாஞ் சிவமா யிருக்கும் நிலையை யறிந்த இவனே மேலான சிவஞானி' யெனக் கருதி அவ னது திருவடிகளில் விழுந்து வணங்கி அவன் கழற் றிய பாதரக்ஷைகளைத் தமது முடிமீதுவைத்து ஆனந் தக் கூத்தாடி,




'ஜ்ஞாநாவலம்பிந: கேசித்
கேசித் கர்மாவலம்பிந: ।
வயம் து சிவபக்தாநாம்
பாத ரக்ஷாவலம்பிந: ॥

(ஞானந்தானே மேலாகு நன்மை யனைத்துந் தருமென்று
மீன மகன்ற கருமமே யெவற்றின் மேலாகுவதென்று
மான விரண்டுஞ் சிலர்பற்ற வடியே முக்கட் பரனடியார்
மேன்மைப் பதந்தாங் கடிநிலையே விரும்பி நாளுமேற்
[கொள்வாம்)

என்று பாடி எல்லாஞ் சிவரூபமாகக் கண்டு வாழ்ந்து வருவராயினர்.

ஒரு சமயம் ஒரு நாய் ஆசாரியருக்குப் பாகம் அமைக்கும் அட்டிற் சாலையிற் புகுந்து அன்னத்தை யுண்டது. ஆசாரியர் 'நம்மை யுடையவராகிய சிவ பெருமானே இவ்வடிவில் வந்து உண்டார்' றென்று தெளிந்து, எஞ்சிய வுணவைச் சிவ நின்மாலியமாகக் கொண்டு சிவபெருமானை மறவாத சிந்தையுடையவ ராய்ச் சுற்றத்தாருடன் உண்டனர்.

பின்னொருநாள் ஆசாரியர் எண்ணெய் தேய்த்து நீராடி ஆடை முதலியன எடுத்துக்கொண்டு காவேரிக் குப் புறப்பட்டுப் போயினர். இடைவழியில் வயது முதிர்ந்து பழுத்த புலைஞனொருவன் தள்ளாடிய நடை யுடையவனாய்க் கோலூன்றித் தன் எளிய நிலையை எடுத்துச் சொல்லி 'எனக்குப் பசி அதிகமாயிருக்கின் றது. தண்ணீர்த்தகை வாட்டுகின்றது. சுவாமீ, சிறிது

அருள் செய்யவேண்டும்' என்று கூறினான். ஆசாரியர் உடனே தமது வீட்டிற்குத் திரும்பிவந்து அப்புலைஞன் விரும்பியவாறு எள்ளுப் பிண்ணாக்கும் கஞ்சியுங் கொடுத்தனர். கிழப்புலைஞன் அவற்றைப்பெற்று உண்டு மகிழ்ந்து சென்றனன். மறுநாள், விஷு அயன முதலிய புண்ணிய காலங்களிற் சிவபெருமானுக்கு மகாபிடேகஞ் செய்யும் நியமம்பூண்ட சோழவரசர், அன்றைப் புண்ணிய நாளிலும் அவ்வழக்கப்படி சிவபெருமானுக்கு மகாபிடேகஞ் செய்தனர்: அந்தணர்களுக்கும் உணவு அளித்தனர். சிவபெருமான்மகாபிடேகஞ்செய்த நாளிரவிலே அரசரது கனவிலெழுந்தருளித் தமது மகிழ்ச்சியைக் கூறியருளுவது வழக்கம். அன்றும் அரசர் நெடும்பொழுது சிவத்தியானத்திலிருந்து நித்திரைக்குப்போய் அதிக நேரமாகியும் சிவபெருமான் எழுந்தருளாமையால் மிகவும் மனம் வருந்தித் துயில்கொண்டார். அப்பொழுது சிவபெருமான் அரசரது கனவிலே ஓர் சிவனடியாராக எழுந்தருளி 'அரசனே, இன்று நீ செய்த உபசாரங்களனைத்தும் நேற்று நான் கிழப்புலைஞனாகச் சென்றபோது என் விருப்பப்படி எள்ளுப்பிண்ணாக்கும் வடித்த கஞ்சியுங் கொடுத்து அரதத்தன் செய்த உபசாரத்திற்கு ஈடாகமாட்டா' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். அரசர் துணுக்குற்றெழுந்து சிவத்தியானபரராயிருந்து உதயகாலமானதும் நாட்கடன் முடித்து ஆசாரியரது வீட்டிற்கு வந்து அவர் திருவடிகளில் வணங்கிக் கனவின் வரலாற்றைக்கூறி மீட்டும் வணங்

கினர். இஃதறிந்த அவ்வூரார் அனைவரும் ஆசாரிய ரது சிவபத்தியை வியந்து கொண்டாடினர். ஆசாரியர் சிவபெருமான் தம் அன்பரிடத்துக் கொண்ட எளிமையைப் பாராட்டிப் புகழ்ந்து மகிழ்சிறந்தனர்.

செங்கோன் முறை வழுவாது அரசு புரிந்து வருஞ் சோழவரசர் தீர்த்தயாத்திரை செய்யத் தொடங்கிப் பல சிவதலங்களுக்குஞ்சென்று வருவாராயினர். அங்ஙனம் வருகின்றவர் கஞ்சனூரையடைந்து காவேரியிலே நீராடி, அருள் சூல்கொண்ட கற்பகநாயகியாரையும் அக்கினீசுவரப் பெருமானையும் வழிபட்டுப் பிரதக்கிணம் செய்துவரும் பொழுது சிவயோக பராரா யெழுந்தருளியிருந்த அரதத்தா சாரியரை வணங்கிச் 'சுவாமி, அடியேனைக் காத்தருளல் வேண்டும்' என்றார். ஆசாரியர் அரசரைநோக்கி 'அரசரே, உம்முடைய நாடு பண்டாரம் சுற்றத்தார் எல்லாம் க்ஷேமமா?' என்று வினவ, அரசர் 'சிவபெருமான் திருவருளினாலும் தேவரீர் கிருபாகடாக்ஷத்தினாலும் க்ஷேமமே' யென்று கூறிச் 'சுவாமி, அடியேன் இவ்வுடம்போடு கயிலை செல்ல விரும்புகின்றேன். அதற்கோர் வழியினை யருள் புரியவேண்டும்' என்று பணிந்து தெரிவித்தார். ஆசாரியர் அரசரைநோக்கி 'நீர் இவ் வக்கினீசுவரம் திருக்கோடிகா திருவாலவனம் திருவாவடுதுறை ஆபற்சகாயேசம் பிராணேசம் ஆமிரவன மென்னும் ஏழு தலங்களையும் அரையாமத்தினுள் வழிபட்டு வலம் வருவீராயின் உமது விருப்பம் நிறைவேறும்' என்றருளிச் செய்தனர்.

அரசர் அதற்கிசைந்து ஒரு ஏவலாளன் வெண்குடை நிழற்றக் குதிரைமீதேறி அரையாமத்திற்குள் ஏழு தலங்களையுந் தரிசித்து மீண்டு கஞ்சனூரை யடைந்து திருக்கோயிலுட் செல்லும்பொழுது குடைபிடித்தவனும் குதிரையும் ஓடிவந்த வேகக் களைப்பினால் கீழே விழுந்து மூர்ச்சிக்க, அவ்வளவிலே விமானமொன்று வர அதிலேறிக் குடைபிடித்தவனுங் குதிரையும் கயிலாயஞ் செல்வது கண்ட ஆசாரியர் அக் காட்சியை அரசருக்குக் காட்ட அரசர் தமக்கு விமானம் வாராமைக்கு மனம் நொந்து அதன் காரணத்தை ஆசாரியரிடம் வினவினார். ஆசாரியர் அரசனை நோக்கி 'நீர் வலம் வந்த முறையெவ்வாறு?' என வினவ, அரசர் 'அடியேன் குதிரைமீதேறிக் குடை நிழற்றச் சென்று வந்தேன்' என்றனர். ஆசாரியர் கால் நடையாய் வருந்தி அரையாமத்தினுள் ஏழு தலங்கட்குஞ் சென்று வந்தமையால் குடை பிடித்தவனுக்குங் குதிரைக்கும் விமானம் வந்தது. நீரும் அவ்வாறு வரின் அது கிடைக்கும்' என்றருளினர். அரசரும் அவ்வாறே ஏழுதலங்களையுங் கால் நடையிற்சென்று வழிபட்டு அரையாமத்தினுள் மீண்டு கஞ்சனூர் வந்து அக்கினீசுவரப் பெருமானை வணங்கி ஆசாரியரை எய்திச் 'சுவாமி, தேவரீர் அருளியவாறு செய்து முடித்தேன்' என்று சொல்லிய அளவிலே ஆயிரகோடி ஞாயிறு ஒருங்குதித்தாற் போன்ற ஒளியுடைய விமானமொன்றிலே விநாயகர் சுப்பிரமணியர் திருநந்தி தேவர் முதலியோர் புடை

சூழப் பிரம விஷ்ணுக்கள் முதலியோர் போற்றிப்புகழ உமாதேவி சமேதராய்ச் சிவபெருமான் இடபாரூடராய்க் காட்சி கொடுத்து அரசரை விமானத்திலேற்றிக் கொண்டு செல்வாராயினர். அரசர் ஆசாரியரை வணங்கி 'சுவாமி, அடியேன் கயிலாயஞ் சென்று வருகின்றேன்' என்று கூறி விடைபெற்றுச் சென்றார். இந்நிகழ்ச்சி கண்ட அனைவோருஞ் சிவக்ஷேத்திர தரிசன பலனும் ஆசாரியரது பெருமையுந் தெளிந்து மகிழ்ந்தனர்.

ஒரு நாள் அக்கினீசுவரப் பெருமான் ஓ ரந்தணராகி ஆசாரியர் வீட்டிற்கு வந்து 'ஓ! சாத்திரிகளே!' என்று உரத்த குரலில் அழைத்தனர். ஆசாரியர்,

'நவயம் கவயோ ந சாஸ்த்ரிணோவா
ந ச பௌராணிக நாடக ப்ரவீணா: ।
சிவ நாமநி வேததாவிசேஷே
பரமாநந்தபயோநிதௌ நிமக்நா: ॥

(கவிஞனு மல்லோ மற்றைக் கலைஞனு மல்லோ மிந்தப்
புவிபுகழ் புராணஞ் சொல்லும் புலவனு மல்லோங் கூத்து
நவில்பவன் றனு மல்லோ நறுங் கொன்றைச் சடைதாழின்
தவலரும் புணரி மூழ்குந் தன்மையிற் சிறந்து ளோமே.) [பத்

என்று கூறி, வீதியில் வந்து பார்க்கும் அளவில் யாரையுங் காணமையிற் சிவபெருமானே இவ்வாறு திருவிளையாடல் புரிந்தன ரென்று தெளிந்து மகிழ்ந்தனர்.

ஒரு சமயம் வேற்று நாட்டுப் பார்ப்பனனொரு வன் கஞ்சனூரிலே வந்து பொருட்பெண் டொருத்தி யில்லஞ் சென்று தான் அரதத்தாசாரியரது புதல் வனென்றுந் தன்னை மகிழ்விப்பின் மிகுந்த பொருள் தருதல் கூடுமென்றுஞ் சொல்லினன். அதனை வாய் மையாகக்கொண்ட அம்மாது அப்பார்ப்பனனைப் பல வகையால் மகிழ்வித்தனள். சிலகாலம் அவன் அவ ளோடு கலந்திருந்து பின்னர் அவளுக்கு யாவதுங் கொடாது அவ்வூரினீங்கினன். அவள் ஆசாரியர் வீட்டுக்கு வந்து 'சுவாமி, தங்கள் புதல்வர் என் னோடு நெடுநாளாக மகிழ்ந்திருந்து யாதுங் கொடாது போய்விட்டன' ரென்று கூறினள். அது கேட்ட ஆசாரியர் சிவபெருமானே அவ்வாறிருந்து போயின ரென்று ஆயிர நிஷ்கம் பெறும் பொற்கலனைக் கொடுத் தனர். அம்மாது தானும் மகிழ் சிறந்து அதனைப் பெற்றுச் சென்றனள். இதனை யறிந்த அவ்வூரார் அவளிடம் போய் 'நீ பெருந்தவறு செய்து விட்டாய். ஆசாரியரது புதல்வர் எண்மரும் சிறந்த ஒழுக்க முடையவரென்பதற்கு இஞ்ஞாலமே சான்றாகும். நீ அப் பொற்கலனை ஆசாரியரிடம் மீண்டு சேர்த்து விடு' என்று கழறினர்கள். அம்மாது அது கேட்டு மிகவும் அஞ்சி ஆசாரியரிடம் வந்து 'சுவாமி, இதனைப் பெற் றுக் கொண்டு அடியேன் செய்த பிழையைப் பொறுத் தருளல் வேண்டும்' என்று குறையிரந்து முன் பெற் றுச் சென்ற பொற்கலனை ஆசாரியர்முன் வைத்து நின்றாள். அப்பொழுது ஆசாரியர் 'அம்மே, உன்

பால் அதனை நான் கொடுக்கும்பொழுது சிவார்ப்பண புத்தியாற் கொடுத்தேன். ஆகையாற் பரம சற்பாத்திரர்பாற் கொடுத்த அதனை மீளப் பெற்றுக்கொள்ள மாட்டேன்' என்று கூறி மறுத்தருளினார். இதனைக் கேட்டதும் அம்மாதரசிக்கு மனத்தூய்மை யுண்டாக அவள் அவ்வாயிர நிஷ்கத்தாலும் திருவிடைமருதூரிலே மகாலிங்கப்பெருமானுக்கு மண்டபம் விமான முதலிய பணிவிடை செய்தாள்.

ஓராண்டில் அக்கினீசுவரப் பெருமானுக்குத் தேரோட்டம் மிக்க சிறப்புடன் நடைபெற்றது. அத்திருநாளைச் சேவிப்பதற்குக் கஞ்சனூரிலுள்ள பெண்டிரெல்லாம் தங்களைப் பலவகை அணிகலங்களாலே அழகு செய்துகொண்டு புறப்பட்டார்கள். ஆசாரியரது புதல்விகளாகிய கற்பகை மீனாக்ஷியென்னு மிருவரும் ஆசாரியரிடம் வந்து 'அப்பா, அயலகத்துப் பெண்கள் போல எங்கட்கும் அணிந்து கொள்ள ஆபரணங்கள் வேண்டும்' என்று பணிவுடன் வேண்டினர். ஆசாரியர் அவர்களை நோக்கி,

'ஸர்வாங்காநாம் பவேத் பூதி
பூஷணம் கலு சோபநம் ।
சிவாபதாந ச்ரவணம்
கர்ணயோர் மண்டநம்ஸதா ॥

'கரபூஷா சிவார் சைவ
ப்ரதக்ஷிண விதிர் பவேத் ।
பாதயோர் பூஷணம் தஸ்மாத்
கிமர்தம் து:கிதே ஸுதே ॥'

(கவின்றரும் வெண்ணீ றுடன்முழு தணிந்து
கலனென மிளிர்வது மன்றிச்
சிவன்றிருப் புகழ்கள் செவிமடுத் திடலே
செப்பருந் தோடெனப் பொலிய
வவன்றிரு வடிக்கீ ழருச்சனை புரித
லன்பொடும் வலம்வர லிவைதாந்
தவம்புரி கைகா லணியெனச் சிறப்பத்
தயங்கிநீ ரழுங்குவ தெவனோ)

என்றருளிச் செய்தனர். அது கேட்ட புதல்வியர் 'அப்பா, எங்களுக்கு இவையெல்லாம் மேலான செல்வங்களாக அமைந்திருப்பினும் எங்கள் தோழி கள் தங்களைப்போல எங்களிடம் உலகத்தார் கொள் ளும் அணிகலங்க ளில்லையென்று இகழுகின்றார்கள்' என்றனர். ஆசாரியர் 'முற் பிறப்பிற் சிவபெருமானை வழிபட்டார்க்கே இப்பொழுது அணிகல முதலியன கிடைக்கும்' என்று கூறப் புதல்வியர் 'அப்பா, தேவரீ ருக்கு இவை கிடைத்தலரிதன்று எப்படியுந் தருதல் வேண்டும்' என்றார்கள். ஆசாரியர் சிறிது பொழுது சிவபெருமானது திருவடிகளை உள்ளக்கிழியின் உரு வெழுதி வீற்றிருந்து பின்வெளிப்போந்து தெருவிலே செல்லும் ஓர் எருத்தை அவர்கட்குக் காட்டி 'இவ் வெருத்தின் குளம்பு அழுந்திய இடங்களில் உங்களு க்கு வேண்டிய அணிகலங்கள் கிடைக்கும். நீங்கள் அதன்பின் சென்று அவற்றைப் பெறுங்கள்' என்றரு ளினர். புதல்வியர் அவ்வாறே சென்று பலவித மான ஆபரணங்களைக் கண்டெடுத்துவந்தார்கள். ஆசா

ரியர் புதல்வியரை நோக்கி 'நீங்கள் கண்டெடுத்தன எவ்வெவ்வணிகள் ?' என்றுகேட்க, அவர்கள் 'சிலம்பு, பாதசாலம், பாடகம், மேகலை, அரைப்பட்டிகை, பதக்கம், பவளமாலை, தோளணி, கைவளை, ஆழி, தோடு, சுட்டி, திலகம், தலைக்கலன் முதலாயின வெல்லாங் கிடைத்தன' என்று கூறினார்கள். பிறகு தமது தாயாரிடம்போய் ' அம்மே, எமக்கு இவ்வணிகளைப்பூட்டி அலங்கரிக்கவேண்டும் ' என்று வேண்ட, அம்மையாரும் அவ்வாறே அலங்கரித்து விடுக்க அவர்கள் தங்களுக்கு அணிந்தன போக எஞ்சிய அணிகலங்களை அக்கினீசுவரப்பெருமானுக்கும் கற்பகநாயகியம்மையாருக்கும் அலங்கரிக்கும் பொருட்டுப் பழம் முதலியன எடுத்துக்கொண்டு தம் தோழியாரோடு திருக்கோயில் சென்று வழிபட்டு மீண்டார்கள். இதனையறிந்த பலரும் ஆசாரியருடைய பெருமையை வியந்து மகிழ்ந்தார்கள்.

ஒரு நாளிரவிலே ஆசாரியர் திருவாவடுதுறையிலே சென்று மாசிலாமணிப் பெருமானை வழிபட்டு மீளும் பொழுது காற்றும் மழையுங் கலந்து அடிக்க இருள் மிகுவதாயிற்று. அடியார்க் கெளியராகிய மாசிலாமணிப் பெருமான் இடைக்கோலம் பூண்டு ஆசாரியரைப் பின்றொடர்ந்து வந்தார். ஆசாரியர் தம்முடன் வரும் ஆயனைக்கண்டு 'நீ யார்' என்று வினவ, அவ்வாயர் 'திருவாவடுதுறை எனது ஊர். நான் பசுக்களை மேய்ப்பவன். உமக்குத் துணையாக வந்தேன்' என்றார். ஆசாரியர் இவ்விருளிலே நமக்குத்

துணை கிடைத்ததே' யென்று மகிழ்ந்து 'நீ அவ்வாறு என்னுடன் வருவதாயின் வருக' என்று கூறித் தம் முடன் கூட்டிக்கொண்டு போய் வீட்டைச்சார்ந்ததும் ஆயரை நோக்கி 'நீ உணவு அருந்திச் செல்லலாமே' யென, ஆயர் 'உணவை என்னிடங் கொடுத்து விட்டால் நான் என் வீட்டுக்குக் கொண்டுபோய் உண்ணுகிறேன்' என்றார். ஆசாரியர் அதற்கிசைந்து அன்னமும் பாகற்காய்க் குழம்புங்கொடுப்ப, மாசிலாமணிப் பெருமானாகிய ஆயர் திருவாவடுதுறை யாலயம் அடைந்து அர்த்த மண்டபத்திலே அவற்றைச் சிதறி விட்டனர். மறுநாட் காலையில் திருமேனி தீண்டுவார் இவ்வாறு சிந்திக்கிடப்பது கண்டு மனம் வருந்தி அதிகாரிகளிடம் தெரிவித்தனர். அதிகாரிகள் கோயிற் பரிசாரகர்களை வரவழைத்து 'இவ்வநாசாரம் எங்ஙனம் நடந்தது? உண்மை கூறுதல் வேண்டும்' என்று ஒறுக்கத் தொடங்கினார்கள். அவர்கள் 'யாங்கள் இவ்வநாசாரம் செய்திலோம். நேற்றிரவு ஆலய முழுவதுஞ் சுற்றிப்பார்த்தே திருக்காப்பிட்டுச் சென்றோம் இது செய்தாரை யாங்கள் அறிந்திலோம்' என்று சொல்லி வருந்தி நின்றார்கள். அப்பொழுது ஓர் அசரீரிவாக்கு 'நேற்றிரவு அரதத்தாசாரியர் இங்கே தரிசனஞ்செய்து மீளும்போது மழையுங் காற்றும் அடித்ததால் மாசிலாமணிப் பெருமான் அவருக்குத்துணையாக ஆயவடிவிற் சென்றனர். வீடுசேர்ந்ததும் ஆசாரியர் திருவமுது கொள்ளச் சொல்லப் பெருமான் என்னிடம்கொடுக்க வேண்டும் உணவைக்

கொடுத்து விட்டால் நான் என்வீடு சென்று உண்கிறேனென்று கூறி, ஆசாரியர் கொடுத்த அன்னத்தையும் பாகற்காய்க் குழம்பையும் பெற்றுவந்து இவ்வாறு சிதறித் திருவிளையாடல் புரிந்தனர்' என்று விண்ணில் எழுந்தது. அது கேட்டு அனைவரும் வியப்பெய்தி ஆசாரியரது பெருமையைப் புகழ்ந்தார்கள். ஆசாரியரும் பின்பு இந்நிகழ்ச்சியைத் தெரிந்து 'அடியனேன் பொருட்டு இரவில் மலரடிகள் நோவ வந்த கருணைத்திற மென்னே! என்று வாயாரப் புகழ்ந்து போற்றினர்.

பின்பு தமது முதுமை காரணமாக ஆசாரியர் வழக்கம் போல நாடோறும் * ஏழு தலங்கட்கும் போய்த் தரிசனஞ் செய்து வரமுடியாமையால், தமது ஆன்மார்த்த பூசையிலே அவ்வேழு தலத்து மூர்த்திகளையும் ஆவாகித்து வழிபட்டு வருவாராயினர்.

திரியம்பகரென்னும் ஓரந்தணர் யதீசுவரரொருவரை யடைந்து தொண்டு பூண்டொழுகி வரும் நாளில் ஒரு நாள் அவர் யதீசுவரரை நோக்கிச் 'சுவாமி, நான் வேத முதலிய வித்தைகளையும் பயின்றேன். ஐந்தெழுத்துபதேசமும் பெற்றேன். இவற்றின் மேலாக அறியற்பாலதனை அருளிச் செய்ய வேண்டும்' என்று கேட்டனர். யதீசுவரர் 'ஐந்தெழுத்தினுஞ் சிறந்த தொன்றுமில்லையென்னும் உண்மையை யறி

---

* **ஏழுதலங்களாவன:**—அக்கினீசுவரமாகிய கஞ்சனூர், திருக்கோடிகா, திருவாலவனம், திருவாவடுதுறை, ஆபற்சகாயேசம், பிராணேசம், ஆமிரவனமென்பன.

யாத பேதையா யிருக்கின்றான் இவன்' என்று திரியம்பகர்மீது இரங்கி 'இன்னும் சில இரகசியம் உண்டு. நாளைடைவிற் கூறுகிறேன்' என்றார். பல ஆண்டுகள் கழிந்தன. ஒரு நாள் திரியம்பகர் உணவின் பொருட்டு வெளியிற் போயிருந்த சமயம் யதீசுரருக்கு இறுதிக்காலம் கிட்டியது. யதீசுவரர் திரியம்பகருக்கு உண்மை யறிவித்தலை விரும்பி நிலத்திலே 'ஐந்தெழுத்தினும் மேலாய் அறியற்பாலது பிறிதொன்றுமில்லை' யென்று எழுதி உயிர் நீத்தனர். இவ்வாறு யதீசுவரர் எழுதியதைப் பார்த்துக்கொண்டிருந்த கழைக்கூத்தியாகிய வேசி யொருத்தி அதனைத் தன் காதோலையி லெழுதிக்கொண்டு நிலத்தி லெழுதப்பட்டதை யழித்துத் தன் வீட்டுக்குச் சென்றாள். திரியம்பகர் மீண்டுவந்து தமது குரு இறந்து கிடப்பதற்கு வருந்தி நிற்கும் அளவில் அங்குள்ளார் சிலர் 'உமது குரு நிலத்திலே யெழுதிய தொன்றை ஒரு வேசி எழுதிக்கொண்டு போய்விட்டாள்' என்றனர். திரியம்பகர் தமது குருவுக்குச் செய்ய வேண்டிய சரம கைங்கரியங்களைச் செய்து முடித்து அவ்வேசியின் வீட்டைத் தேடிச் சென்று அவளைப் பலவாறு புகழ்ந்து காதோலையைத் தருமாறு கேட்டனர். அவள் என்னோடிருந்துண்டு என்னை மகிழ்விப்பீராயின் நான் காதோலையைத் தருவேன்' என்றனள். திரியம்பகரும் அதற்கு உடம்பட்டு அவளைப் பலவிதத்திலும் மகிழ்வித்துக் காதோலையைப் பெற்றுத் தமது குருவின் உபதேசத்

தைப் படித்தறிந்து மகிழ்கூர்ந்தாராயினும் தாம் இது காறும் வேசியோடு உண்டு உறைந்த பிழைக்குக் கழுவாய் யாதாகுமோ என்று கவலைகொண்டு, தைப் பூசத்திலே திருவிடை மருதூருக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து பின் சுவாமி காவேரியில் தீர்த்தங் கொடுக்கும் பொழுது நீராடி வழிபட்டு மீண்டு வரும் வழியில் அரதத்தாசாரியர் வீட்டை யடைந்து 'சுவாமி, எனக்கு அன்னங் கொடுத்தல் வேண்டும்' என்று இரந்தனர். ஆசாரியர் அவரைத் தம்முடன் கூடப் பந்தியில் வைத்து அவர் விரும்பிய வாறு உண்பித்தார். உணவு முடிந்து திரியம்பகர் வெளிப்போந்ததும் சிலர் ஆசாரியரிடம் போய் 'இவன் வேசையோடு பழகியவன்' என்று கூறினார் கள். பின்பு திரியம்பகரை நோக்கி அச்சிலர் 'நீ எங்கிருந்து உண்டாய்?' என அவர் உள்ளதை உள்ளவாறு கூறினர். அது தெரிந்ததும் அவர்கள் ஆசாரியர்பாற் சென்று 'வேசையோடு உண்டு உறைந்த இம்மாபாவியைப் பந்தியில் வைத்துத் தேவரீர் உண் டது பழிப்புக்கு இடமாகுமன்றோ' என்று கேட் டார்கள். அப்பொழுது ஆசாரியர் 'வருந்திய மாத வத்தோர் வானோர் ஏனோர் வந்து ஈண்டிப் பொரு ந்திய தைப்பூசத்திலே காவிரியில் நீராடி மகாலிங் கப்பெருமானை வழிபட்டவர் இவர். ஆதலின் இவர் பாவங்களனைத்தும் ஒழிந்தன. சிவதரிசனத்தினாலே கோடி சன்மங்களிற் செய்த பாவங்களெல்லாம் அக லும்' என்றருளினர். இதன் உண்மையை அச்சிலர்

அறியாதவர்களாய் மேலும் மேலும் ஆசாரியரிடம் பல வினாக்கள் எழுப்பினார்கள். ஆசாரியர் திரியம்பகரை நோக்கி, ' நீர் இவர்களை அழைத்துக் கொண்டு திருவிடைமருதூர் சென்று மகாலிங்கப் பெருமானிடத்தில் ' சுவாமி, தைப்பூசத்தில் காவேரியில் நீராடி உம்மைத் தரிசித்தமையால் என்பாவம் ஒழிந்ததா? என்று கேளும் ' என்று கூறிவிடுத்தனர். திரியம்பகர் அவ்வாறு அவர்களோடு திருவிடைமருதூரையடைந்தபொழுது ஆலயத்தில் சிவனடியார்கள் நிறைந்திருந்தனர். திரியம்பகர் ஆசாரியர் அருளியவாறு கேட்க மகாலிங்கப் பெருமான் 'குழந்தாய், நீ செய்தபாவம் ஒழிந்துவிட்டது ' என்றருளினர். அச்சிலர் இதனைக்கேட்டும் உண்மை விளங்காதவராய் 'இஃது எதிரொலியே யன்றி மகாலிங்கப்பெருமான் றிருவாக்கன்று' என்றுகூறி மறுத்தனர். திரியம்பகர் சிவ வாக்கையும் மனிதவாக்கென்று கூறும் காலம் வந்ததேயென்று மனம் வருந்தி ஆசாரியரை அடைந்து நிகழ்ந்த செய்தியைக் கூறினர். ஆசாரியர் அவர்களோடு தாமும் திருவிடைமருதூர் சென்று திரியம்பகரை நோக்கி மற்றொருமுறை முன்போலப் பெருமானிடம் கேட்குமாறு கூறியருளினர். திரியம்பகரும் கேட்டனர் அப்பொழுது மகாலிங்கப்பெருமான் 'நம்மைத் தரிசித்ததாலும் காவேரியில் நீராடியதாலும் உன்பாவம் ஒழிந்தது ஒழிந்தது' என்று இடிமுழக்கம்போல *வானிழலாற் கூறியருளினார். அது

* வானிழல் - அசரீரி.

கேட்டு எல்லாரும் ஆசாரியர்து பெருமையும் பூசநீராட்டின் பயனுந் தெரிந்து மகிழ்சிறந்தனர்.

அரதத்தாசாரியரின் சகோதரி புதல்வர் ஒருவர் காசிக்குச் சென்று மணிகர்ணிகையில் நீராடவேண்டு மென விரும்பினர். ஆனல் அவர் முடவர் ஒரு நாள் அவர் தமதுவிருப்பத்தை மாதுலராகிய ஆசாரியரிடம் தெரிவித்தனர். ஆசாரியர் கஞ்சனூரிலேயுள்ள பிரம தீர்த்தத்திலே அவரை மூழ்கச்சொல்லினர். அவ்வாறு மூழ்கிய மருகர் காசியிலே மணிகர்ணிகைக்கட்டத்தை யடைந்து கங்கையில் நீராடி விசுவநாதப் பெருமானை யும் விசாலாக்ஷியம்மையாரையும் வழிபட்டுக்கொண் டிருந்தனர். பல வருடங்கள் அம்மருகர் அங்கே தங்கி யிருந்தனர். ஒருநாள் அவர் விசுவநாதப் பெருமானை வழிபட்டுத் திரும்பும்போது ஆலயத்தினருகில் ஒரு வர் விடக் கோலம் பொலிந்து தோன்றத் தம் மனைவி யோடு சதுரங்கமாடிக்கொண் டிருக்கக்கண்டார். உடனே அவ்விடர் அவரை நோக்கி 'உம்முடைய ஊரிலே காசியபகோத்திரராகிய அரதத்தரென்னும் வைதிகர் இருக்கிறாரா?' என்று வினவினர். அதற்கு மருகர் 'ஐயா, ஆம். அவர் எனது மாதுலர். அச் சைவேந்திரர் க்ஷேமமா யிருக்கின்றார்' என்றார். அதனைக் கேட்ட அவ்விடர் தமது மகிழ்ச்சியை வெளிக்காட்டி 'நீர் அவரிடம் காசியில் உம்மை ஒரு வர் விசாரித்தாரென்று சொல்லும்' என்று சொல்லி னர். அவ்விடருடைய மனைவியும் புன்முறுவலோடு நானும் விசாரித்தேனென்று சொல்லும்' என்று

'கூறினள். மருகர் அவ்விடரை நோக்கி 'யான் அங்கே போவது எப்படி ?' யென்றார். விடர் ' நீர் எவ்வாறு இங்கு வந்தீர் ?' என, அவர் தாம் தமது மாதுலர் சொற்படி பிரமதீர்த்தத்திலே முழுகி இங்கே யெழுந்த செய்தியைக் கூறினர். விடர் 'அப்படி யாயின் இப்பொழுது மணிகர்ணிகையிலே மூழ்கும்' என்றனர். அவ்வாறே மருகர் மூழ்கிப் பிரமதீர்த்தக் கரையிலே யெழுந்து மாதுலரை அடைந்து வணங்கிச் ' சுவாமி, உமது திருவருளால் நான் காசியிலே சென்று கங்கையில் நீராடி விசுவேசரைத் தரிசிக்கப் பெற்றேன் ' என்றார். ஆசாரியர் ' யாவரேனும் என்னை யறிந்தார் அங்கேயிருந்தாரா ? என்று கேட்க மருகர் ' சதுரங்கமாடிக்கொண்டிருந்த விடதம்பதி கள் தங்கள் க்ஷேமத்தை விசாரித்தார்கள்' என்றனர். அது கேட்டதும் ஆசாரியர் என்னுடைய க்ஷேமத்தை விசாரிப்பவர் எம்பெருமானும் எம்பெரு மாட்டியாருமன்றி யாருமிலரென்று தெரிந்து ' அவர் கள் கேட்டார்களா ? அவர்கள் கேட்டார்களா ?' என்று சொல்லிக்கண்ணீர் வார்த்து மெய்ம்மயிர் சிலிர்த்து ஆனந்தபரவசராய்க் கூத்தாடினர். அச்சம யம் ஓரசரீரிவாக்கு அனைவரும் கேட்குமாறு ' மணி கர்ணிகையில் மூழ்கினவர் பிரமதீர்த்தத்தில் எழுந்த மையால் இத்தீர்த்தமும் மணிகர்ணிகையென வழங் கப்படுவதாக. இதில் நீராடினோர் பாவமனைத்தும் ஒழிக ' என்று எழுந்தது. ஆசாரியர் முதலிய அனை வரும் ' இது சிவபெருமானது திருவிளையாடலெனத் தெளிந்து மகிழ்ந்தார்கள்.

மருகர் மாதுலராகிய ஆசாரியர்பால் பலவற்றை யுந் தெரிந்து எல்லாம் வல்லவராயினர். அவர் ஆசாரியர் அருளிச்செய்த 'சுருதிசூக்திமாலை'க்கு ஓர் சிறந்த வுரையியற்றி மிக்க புகழ் பெற்றார். அவரது பெருமையுணர்ந்தோர் அவரையும் அரதத்தரெனப் பெயரிட்டழைப்பாராயினர்.

ஒரு சமயம் திருடனொருவன் அரண்மனையிலே திருடினான். காவலர்கள் அவனைப் பின்தொடர அவன் ஆசாரியர் வீட்டினுள் விரைந்து புகுந்து 'சுவாமி, நான் அரண்மனையிலே திருடினேன். காவலர்கள் கடுகி வருகின்றனர். அவர்களிடமிருந்து என்னைக் காத்தருளவேண்டும்' என்று வேண்டினன். ஆசாரியர் அத்திருடனுக்குத் திருநீறுசாத்தி பூணூல் உருத்திராக்ஷமென்பன அணிந்து அவனைப் புதல்வனைகப் பாவித்து வெண்கலவட்டிலிலே உணவுகொடுத்து உண்பிப்பாராயினர். பின்னுக அவனைத் தொடர்ந்து வந்த காவலர்கள் 'இங்கே வந்த கள்வன் எங்கே?' என்று கேட்க, ஆசாரியர் 'நமது புதல்வன் உள்ளே உணவு கொள்ளுகிறான். நீங்கள் வேண்டுமாயின் போய்ப்பாருங்கள்' என்றார். காவலர்கள் வீட்டினுட் போய் எங்கும் பார்த்தும் ஆசாரியரது புதல்வரை யன்றி யாரையுங் காணுது போயினர்கள். இதனுண்மையை யறிந்தோர் சிவஞானியாகிய ஆசாரியரது பாவனு விசேடத்தைத் தெளிந்து பாவனைபோலி யென்று கூறும் மாபாவாதக் கொள்கை தவறென்பதைத் தேறினர்கள்.

கஞ்சனூரிலே சிவப்பிரியரென்னும் அந்தணரொருவருக்குச் சுமதி தருமபாலனென்ன இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்கள் அழகிலும் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கித் தமது தந்தையாருக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தார்கள். அவ்விருவரும் தகுந்த பருவம் வந்த காலத்திலே ஒருநாள் *விஷூசியாலும் பாம்புதீண்டுதலாலும் ஒருங்கு உயிர் துறந்தார்கள். இத்துன்பம் பொறுக்கலாற்றாத சிவப்பிரியர் அப்புதல்வர்களைக் கட்டித் தழுவி 'முற் பிறப்பில் பெரியோர்க்குத் தீமை செய்தேன் போலும் அதனால் எனக்கு இத்துன்பம் விளைந்தது கொல். முற்பிறப்பில் பிறர் பொருளை வெளவினேன் போலும் அதனால் எனக்கு இத்துன்பம் விளைந்தது கொல். முற்பிறப்பில் வாங்கின கடனை மீளக் கொடுத்திலேன் போலும் அதனால் எனக்கு இத்துன்பம் விளைந்தது கொல். முற்பிறப்பில் உழவர்க்குக் கொடுக்கவேண்டிய பொருளைக் கொடுத்திலேன் போலும் அதனால் எனக்கு இத்துன்பம் விளைந்தது கொல்' எனப் பலவாறு புலம்பி, ஓமஞ்செய்தற்குரிய காலங்கழிவதாகவும், அவர்களை ஈமத்திற்கு எடுத்துச் செல்ல மனமில்லாதவராய் அழுது கொண்டிருந்தனர். ஆசாரியர் அதனையறிந்து அவ்விடம் வந்து, சிவப்பிரியரது துக்கம் அப்புதல்வர்கள் எழுந்தாலல்லது நீங்காமைகண்டு திருநீற்றை மந்திரித்து அப்புதல்வர்கள் உடம்பில் இட்டருளினார். உடனே அவ்விருவரும் உயிர் பெற்

* விஷூசி - பேதி.

றெழுந்து வணங்கித் தூரத்தில் நின்று ஆசாரியரை நோக்கிச் ' சுவாமி, நாங்கள் முற்பிறப்பில் நந்தன் வீரனென்னும் பெயருடையோம் : சிவப்பிரியரது அடிமைகளாய் நாங்கள் தொழில் செய்து வந்தோம். அவர் எங்கட்குப் பல ஆண்டுகளாய்த் தக்க கூலி கொடுத்திலர் : அதனால் யாங்கள் அவர் புதல்வராகப் பிறந்தோம். இன்றோடு எங்கள் கடன் முற்றும் யாங்கள் கைவரப் பெற்றமையால் இறந்தொழிந்தோம்' என்று கூறினர். அவ்வளவில் சிவகணங்கள் விமானமொன்று கொண்டுவந்து ' அரதத்தரது மந்திர விபூதி உங்கள்மீது பட்டமையால் உங்கட்குச் சிவலோகங் கிட்டிற்று இதில் ஏறுங்கள் ' என்று கூறினார்கள். இருவரும் பூதவுடம்பு நீத்துத் தெய்வவுடம்பு பெற்று விமானமேறிச் சிவலோகமெய்தினர். இந்நிகழ்ச்சி கண்ட அனைவரும் வியப்பும் மகிழ்ச்சியுங்கொண்டு ஆசாரியரைப் பணிந்தார்கள்.

ஆசாரியர் சிவபெருமானது திருவடியையகலாது எங்குஞ் சிவபெருமானைக் கண்டு மாறாத சிவானுபவம் மருவியிருக்கும் நாளிலே ஒருநாள் சிவபெருமான் அவருக்கு முத்தி கொடுக்கத் திருவுளங்கொண்டு பிரம விஷ்ணுக்கள் சேவிக்க இடபவாகனத்திலேறி யெழுந்தருளிவந்து ஆசாரியருக்குக் காட்சிகொடுத்தருளினர். ஆசாரியர் கனவிலுந் தேவர்க்கரிய பெருமான் நனவில் தமக்குக் காட்சி கொடுத்தருளிய பேரருளை வியந்து அப்பெருமானைப் பலவாறு தோத்திரஞ் செய்து வணங்கினர். சிவபெருமான் 'அன்பனே, நீ நம்மைப்

பூசை தோத்திரம் செபம் தியான முதலியவற்றால் மகிழ்வித்தனை. உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்' என்றருளினர். ஆசாரியர் 'சுவாமி, அடியேனுக்கு முத்தியளிப்பதோடு அடியேனுடைய வீட்டின் இரு பக்கங்களிலுமாகவுள்ள பதினான்கு வீட்டிலுள்ளவர்களுக்கும் முத்தியளித் தருளவேண்டும்' என்று வேண்டினர். கருணைக்கடலாகிய சிவபெருமான் 'அவ்வாறாகுக' என் றருள்புரிந்தனர். அவ்வளவில் நவரத்தினத்தால் இழைக்கப் பட்டதாய் ஆயிரகோடி சூரியருதயம் போன்று விளங்கிய விமானமொன்று விண்ணினின்றும் இழிந்தது. அவ்விமானத்தில் ஆடவரும் பெண்டிரும் சிறுவர் சிறுமிகளுமாகிய பதின் மூன்று வீட்டாரும் ஏறினார்கள். சிவபெருமான் ஆசாரியரை நோக்கி 'இன்னும் ஒரு வீட்டிலுள்ளாரை யெங்கே' யென்று வினவ, ஆசாரியர் 'பதினான்காவது வீட்டிலுள்ளவள் ஒருகிழவி: ஆயிரந் திங்கள் கண்டவள்: நாடோறும் விநாயகப்பெருமானுக்கு மோதகம் நிவேதிப்பவள்' என்று தெரிவித்து அவளை அழைத்து வருமாறு ஒருவரை விடுக்க, அக்கிழவி அழைக்க வந்தவரைநோக்கி 'நான் அடுப்பில் இப்பொழுதுதான் மோதகம் பாகஞ் செய்துகொண்டிருக்கிறேன். நியமம் தவறக் கூடாதன்றோ. விநாயகப்பெருமானுக்கு நிவேதனஞ் செய்துவிட்டுப் பின்பு வருகிறேன். முற்படப் போகிறவர்கள் போகலாம்' என்று சொல்லினள். ஆசாரியர் இச்செய்தியைத் தெரிந்ததும் 'நாம் இப்பொழுது புறப்படுவோம். அக்

கிழவி விநாயகபூசை முடித்துக்கொண்டுவருகிறுளாம்' என்று கூறச் சிவபெருமான் புன்முறுவல் செய்து விநாயகப்பெருமானை நோக்கி 'நீ அக்கிழவியின் பூசையையேற்று அவளைக்கைலாயத்திற்கு அழைத்து வருக' என்று அருள்புரிந்து ஆலயத்தின் புறம்பே யிருக்கச் செய்தனர். ஆசாரியர் விமானத்திலேறும் பொழுது அவருடைய வைசுவதேவான்னத்தையுண்டு வந்த நாய் தன்னை விட்டுவிட்டு ஆசாரியர் போவது கண்டு அழ, ஆசாரியர் அதனையும் ஏற்றித் தாமும் விமானத்திலேறினுர். சிவபெருமான் ஆரதத்தாசாரிய ரை அழைத்துக்கொண்டு கைலைக்குச் சென்றுகொண் டிருக்கும் அளவிலே அக்கிழவி விநாயக பூசையை முடித்து அப்பெருமானது திருவருளினுல் கைலைக்குச் செல்லும் ஆற்றல்பெற்று இடை வழியிலே ஆசாரியர் முதலியோரைச் சந்தித்து அவர்களுடன் வந்து சேர்ந்தாள். இவ்வாறு ஆசாரியர் முதலிய அனைவ ரும் தேவர்களாலும் முனிவர்களாலும் சித்தர் முதலி யோர்களாலும் வழிபடத்தக்கதும் அழிவில்லாததும் பிரமதேவனும் இந்திரனும் தத்தம் ஊர்திகளை நடை யாலும் மதநீராலுமன்றித் தெரிந்து கொள்ளலாகாத வண்ணம் வெண்ணிறம் விளங்குவதும் மெய்யுணர்ந் தோர் உள்ளம்போல ஆனந்த நிலயமானதுமாகிய ஸ்ரீ கைலாயத்தை அடைந்து பேரின்பப் பெருவாழ் வெய்திஞர்கள்.

---

# ॥ श्रुति सूक्ति माला ॥

## चतुर्वेद तात्पर्य सङ्ग्रहाख्य व्याख्यया सहिता ॥

ॐ

शिवाय नमः

हरदत्ताचार्येण कृता

# श्रुति सूक्ति माला।

---

शिवलिङ्ग भूपाल विरचित

चतुर्वेदतात्पर्य सङ्ग्रहाख्य व्याख्यया

सहिता।

---

तिरुनेल्वेलि पुरस्त हिन्दु कलाशालायां

द्राविड भाषा पण्डितेन

वि. चिदंबर रामलिङ्ग पिळ्ळै नाम्ना

संयक् परिशोधिता।

तिरुनेल्वेलिपुर देदीप्यमानायाः

तेन्निन्दिय शैव सिद्धान्त शास्त्र प्रकटन सभायाः

आदरेण

चेन्नपुरस्थ

शिवकामि विलास मुद्राक्षरशालायां

मुद्रिता

विजयतेतराम् ॥

१९२५

ॐ

शिवाय नमः

श्री हरदत्ताचार्य कृत

# ॥ पञ्चरत्नमालिका ॥



गायत्रीवल्लभत्वाद्दशरथतनयस्थापिताराधितत्वा
च्छौरेः कैलास यात्रावृतमुदित तयाभीष्ट सन्तानदानात् ।
नेत्रेण स्वेनसाकन्दशशतकमलै र्विष्णुना पूजितत्वा
त्तस्मैचक्रप्रदानादपिच पशुपतिस्सर्वदेवप्रकृष्टः ॥ १ ॥

कन्दर्पद्ध्वंसकत्वाद्गरळ कबळनात्काल गर्वापहत्वा
द्दैतेयावासभूत त्रिपुरविदळनाद्दक्षयागजयित्वात् ।
पार्थस्य स्वास्त्रदाना न्नरहरि विजयान्माधवे स्त्रीशरीरे
शास्तुस्संपादकत्वादपि च पशुपतिस्सर्वदेव प्रकृष्टः ॥ २ ॥

वाराणस्याञ्च पाराशरिनियमि भुजस्तंभना त्प्राक्पुराणां
प्रध्वंसे केशवेनाश्रित वृषवपुषाधारित क्ष्मातलत्वात् ।
अस्तोकै र्ब्रह्मशीर्षैरनिशगळ कृतालंक्रियाभूषितत्वा
द्दानात्प्रज्ञानमुक्त्योरपि च पशुपतिस्सर्वदेव प्रकृष्टः ॥ ३ ॥

भूमौ लोकैरनेकै स्सततविरचिताराधितत्वादमीषा
मष्टैश्वर्य प्रदानाद्दशविधवपुषा केशवेनाश्रितत्वात् ।
हंसक्रोडांगधारि द्रुहिणमुरहरान्विष्ट शीर्षांघ्रिकत्वा
ज्जन्मध्वंसाद्यभावादपि च पशुपतिस्सर्वदेव प्रकृष्टः ॥ ४ ॥

वैशिष्ट्येयोनिपीठायितमुररिपुश्लिष्टभावेन शंभो
स्सस्त्रीकार्द्ध प्रतीकायित हरिवपुषालिंगतत्वेनयद्वा ।
अप्राधान्याद्विशिष्टाद्वयसमधिगमे दानवानामराते
श्शंभोरुत्कृष्टभावादपि च पशुपतिस्सर्वदेव प्रकृष्टः ॥ ५ ॥

पञ्चरत्नमालिका समाप्ता ॥

திருச்சிற்றம்பலம்

---

## ஸ்ரீ பாஷ்யகாரராகிய
# மாதவச் சிவஞான சுவாமிகள்
## அருளிச் செய்த
## சுலோகபஞ்சக மொழிபெயர்ப்பு

---

### ஸ்ரீ பாஷ்யம். முதற்சூத்திரத்து இரண்டாவது அதிகரணவுரை

இன்னும்,

“ உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலிற்
றசரதன் மதலை தாபித் தேத்தலிற்
கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்
றனது விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலி
னங்கவற் கிரங்கி யாழியீந் தருடலி
னங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலி
னமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற்
றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலி
னவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்
றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்
றனஞ்செயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மாநுட மடங்கலை வலிதபக் கோறலின்
மாயோன் மகடூஉ வாகிய காலத்

தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலி
னாழ்கடல் வரைப்பி னொன்றே ரனேக
ரன்புமீ தூர வருச்சனை யாற்றலி
னான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலி
னையிரு பிறப்பினு மரியருச் சித்தலி
னிருவரு மன்னமு மேனமு மாகி
யடிமுடி தேட வழற்பிழம் பாதலிற்
பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற்
கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேண்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலி
னயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ
னென்பது தெளிக வியல்புணர்ந் தோரே.”

என்றிங்ஙனம் அரதத்தாசாரியர் கூறிய இவ்விருபத்திரண்டு எதுக்களானும் பரமசிவனே பரம்பொருளென்பது தெளியப்படுதலின், அவனே முழுவதும் ஒடுக்கி உளதாக்கும் சருவகாரண னென்பது உணர்ந்துகொள்க. இவற்றை நாத்திகம்பேசி மறுத்துப் பாஞ்சராத்திரிகள் செய்த கிரந்தத்திற்கு மூல வசனம் இல்லை யென்றொழிக.



ओं

शिवायनमः

# ॥ श्रुतिसूक्तिमाला ॥

## चतुर्वेदतात्पर्यसङ्ग्रहसहिता ॥

---

कल्पान्ते शमितत्रिविक्रममहाकङ्काळबद्धस्फुर-
च्छेषस्यूतनृसिंहपाणिनखरप्रोतादिकोलामिषः ।
विश्वैकार्णवताविहारमुदितौ यौ मत्स्यकूर्मावुभौ
कर्षन्धीवरतांगतोऽस्यतु सतां मोहं महाभैरवः ॥

इह खलु कलिकालकलनानन्तरमवैदिकराद्धान्तानुसन्धानाविशुद्धबुद्धीन्विश्वनिरीश्वरत्वनिर्वाहकवैदिकापातमीमांसककल्पितानल्पविकल्पजल्पश्रवणोन्मिषितकल्मषकलुषीकृतवृषाङ्कविषयशेमुषीकान्मनीषिणोऽनुगृहीतुकामो महेश्वरांशावतारायमाणः पदवाक्यप्रमाणज्ञः हरदत्ताचार्यः शैववैदिकतन्त्रविश्वासकारणाय शैवपुरुषार्थपूरिणीं संसारसागरोत्तारिणीं भवैकभक्तिविभववितारिणीं पञ्चाशदुत्तरशतश्लोकात्मिकां ईश्वरश्रुतिसूक्तिमालां चिकीर्षुः लक्षणप्रमाणाभ्यां हि वस्तुसिद्धिरिति न्यायेन तत्सिद्ध्यर्थं अस्यां श्रुतिसूक्तिमालायां प्रतिपिपादयिषितानि नमश्शेषित्वनिरतिशयैश्वर्यत्वादिगुणकल्पना नारायणोपनिषदुदीरितोपास्यत्वगायत्रीप्रतिपाद्यत्वक्रतुशेषित्वादिरूपाणि पञ्चलक्षणानि संगृह्णानस्तद्विशिष्टत्वेनानन्यसाधारणत्वादस्यैवाश्रयणीयत्वमाह यस्मै नम इति ॥

**यस्मै नमो भवति यस्य गुणास्समग्रा**
**नारायणोपनिषदा यदुपासनोक्ता ।**
**यो नः प्रचोदयति बुद्धिमधिक्रतौ यः**
**तं त्वामनन्यगतिरीश्वर संश्रयामि ॥ १ ॥**

यस्मै नम इति ॥ नमो नमस्कारः यस्मै यस्य सम्बन्धि भवति नमस्कारक्रियाया अस्यैवाभिप्रेतत्वान्नमसस्तत्सम्बन्धित्वं यस्मै नमस्तस्मै त्वां जुष्टन्नियुनज्मि इति मन्त्रानुकरणार्थत्वादनुकार्यानुकरणयोरभेदविवक्षया "नमस्वस्तिस्वा" हेत्यादिना यस्मा इति चतुर्थी। अनेन नमश्शेषित्वं लक्षणमुक्तं। समग्रास्सकला गुणाः ऐश्वर्यादयोयत्सम्बन्धिनः । अनेन निरतिशयैश्वर्यादिमत्वं लक्षणमुक्तं। नारायणोपनिषदा उप समीपे ईश्वरस्य प्रतिपादकत्वेन निषीदतीति उपनिषत् वेदान्तभागः उपनिष्पूर्वास्सत्सूद्विषेति क्विप् सदेरप्रतेरिति षत्वं नारायणेन महर्षिणा दृष्टा उपनिषत् नारायणोपनिषत् तया यदुपासना यस्योपासना उक्ता। अनेन नारायणोपनिषदुदीरितोपास्यत्वं लक्षणमुक्तं। य ईश्वरो नोस्माकं बुद्धिं धर्माधर्मादिगोचरां प्रचोदयति प्रेरयति। अनेन गायत्रीप्रतिपाद्यत्वं लक्षणमभिप्रेतं अधिक्रतौ क्रतोरधि क्रतोरीश्वरः अधिरीश्वर इति अधिशब्दस्य कर्मप्रवचनीयत्वसंज्ञायां "यस्मादधिकं यस्य चेश्वरवचन" मिति क्रतुशब्दात्सप्तमी अत्र सूत्रे ईश्वरशब्दो भावप्रधानः। यस्य स्वामिन ईश्वरत्वमुच्यते तस्मात्स्वामिनस्सप्तमीत्येकः यस्य स्वस्येश्वरत्वमुच्यते तस्मात्सप्तमीत्यपरः।

तत्र यदा स्वाम्यधर्मव्यतिरेकविवक्षा तदा ततस्सप्तमी अत्र स्वार्थवृत्तेः क्रतुशब्दात्सप्तमी। अनेन क्रतुशेषित्वं लक्षणमुक्तं। हे महेश्वर त्वामनन्यगतिः अनन्यशरणस्संश्रयामि प्रपद्ये यद्यप्यस्य संश्रयणक्रियाफलस्य कर्तृगामित्वे "स्वरितञितःकर्त्रभिप्राये क्रियाफले" इत्यात्मनेपदेन भाव्यं। तथापि "श्रियं महेन्द्रनाथस्यजहार नतु मेदिनीं" इत्यादि प्रचुरकविप्रयोगदर्शनात् क्रियाफलस्य कर्तृगामित्वेपि परस्मैपदप्रयोगस्य साधुत्वमवगन्तव्यम् ॥१॥

एवं लक्षणलक्षितस्य परमेश्वरस्य श्रुत्यागमप्रमाणत्वोक्तिपूर्वकं प्रतिपाद्यमर्थं प्रतिजानीते ॥ वेदेष्विति ॥

**वेदेषु वा तदनुयायिषु वा विचार्य**
**तन्त्रेषु वाक्यमखिलं प्रतिपादकन्ते।**
**तात्पर्यसङ्ग्रहमहं विदधे महेश**
**मह्यं प्रसीद नय मामृजुना पथा त्वम् ॥ २ ॥**

पुरुषस्य प्रवृत्त्यर्थं निवृत्त्यर्थञ्च प्रत्यक्षादिभिः प्रतिपत्तुमशक्यस्य हितफलस्याग्निहोत्रादेरहितफलस्य ब्रह्मवधादेः प्रतिपादनार्था वेदाः। तथा चोक्तम्। "प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न बुद्ध्यते। एतं विन्दन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता"। इति। तत्प्रामाण्यमीश्वरप्रणीतत्वेनेति तार्किकानिश्चिन्वते। सर्वज्ञप्रणीता वेदा वेदत्वात् न यदेवं न तदेवं यथा घट इत्यनुमानमीश्वरप्रणीतत्वे प्रमाणं किञ्च वेदवाक्यानि पौरुषेयाणि वाक्यत्वात् कालि-

दासवाक्यवत् इत्यन्वयव्यतिरेकौ च श्रुतिश्च तत्र प्रमाणम्। "त-स्माद्यज्ञात्सर्वहुतः ऋचस्सामानि जज्ञिरे। छन्दांसि जज्ञिरे तस्मात् यजुस्तस्मादजायत"॥ इति सर्वैर्यज्ञैर्हूयमानत्वाद्यज्ञेश्वरत्वेन यज्ञश-ब्देनोपचरितत्वात् तस्मादीश्वरादृग्यजुस्सामानि जातानीति नित्य-त्वेन कर्तृदोषशङ्कानुदयात् अकळङ्कितमाम्नायप्रामाण्यमिति मी-मांसकाः तथाच जैमुनिसूत्रं तत्प्रमाणं बादरायणस्यानपेक्षत्वादिति उक्तञ्च भट्टपादैः। रागद्वेषादिकालुष्यं पुरुषेषूपलभ्यते। अतोप्रा-माण्यशङ्कापि निष्कळङ्के प्रसज्यते॥ वेदप्रमाणता तस्मान्नित्य-त्वेनाभ्युपेयतां॥ इति नित्यत्वेपि परमेश्वरादेव निश्वासवदप्रयत्न-निस्सारिता वेदाः प्रमाणमिति वैय्यासिकाः। तत्र श्रुतिः अस्य महतो भूतस्य निश्वसितमेतदृग्वेदोथयजुर्वेदस्सामवेद इति एतानि तानि वेदप्रामाण्ये हरदत्ताचार्यैरङ्गीकृतानि। तथाच वक्ष्यति। वेदस्स्वयं भवतु वा तव वा प्रणीतिः। इति सर्वथा प्रमाणभूतेषु वेदेषुवाशब्दस्समुच्चये। "वा स्याद्विकल्पोपमयोरेवार्थे च समुच्च-ये"। इति विश्वः वेदेषु च तदनुयायिषु च तदनुसारिषु तन्त्रेषु अत्र तन्त्रशब्दस्सिद्धान्तवाचि। "तन्त्रं प्रधाने सिद्धान्त" इत्यमरः। पुरा-णशिवधर्माद्यागमसिद्धान्तेषु च ते नमश्शेषित्वादिलक्षणलक्षितस्य भगवतः प्रतिपादकं उपक्रमादिषड्विधतात्पर्यलिङ्गैस्तात्पर्येण बोधकं अखिलं वाक्यं विचिन्त्य। अहं। तात्पर्यं परमार्थतस्संगृह्यते संक्षिप्यत इति सङ्ग्रहः। ईश्वरप्रतिपादकवेदपुराणवाक्यतात्पर्य-प्रतिपादकसंक्षिप्तार्थग्रन्थः श्रुतिसूक्तिमालेत्यर्थः। तं विदधे कुर्वे।

महेश मह्यं प्रसीद प्रसन्नोभव मामृजुना अवक्रेण त्वत्प्राप्तौ सन्निहितेनेत्यर्थः पथा मार्गेण प्रवर्तय अन्तर्यामितया विश्वप्रवर्तकत्वादीश्वरस्य नयेत्युक्तं । तथा च वायवीयसंहितायां । "क्षरं प्रकृतिरित्युक्ता पुरुषोक्षर उच्यते । तावुभौ प्रेररयत्यन्यस्सपरः परमेश्वरः ॥ सम्बन्धो मलकर्मभ्यां शिवः प्रेरक ईश्वरः ॥ इति। तथा च श्वेताश्वतरोपनिषदि पृथगात्मानं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति" ॥ इति ॥२॥

नमश्शेषित्वमाख्यातुमैश्वर्यकनिबन्धनम् । महेश्वरपदस्यादौ महादेवैकवाच्यताम् ॥

**मन्त्रार्थवादविधिभिर्बहुधा विभक्तो**
**यश्शब्दराशिरनपेक्षितया प्रमाणम् ।**
**सोयं-विमत्सरविमृष्टपदार्थतत्वो**
**वेदः प्रकाशयति केवलमीश्वर त्वाम् ॥ ३ ॥**

"ईशानस्सर्वविद्यानाम्, ईश्वरसर्वभूतानम्" ॥ इति "तमीश्वराणां प्रथमं महेश्वरं" इत्यादयः ईश्वरविषयमन्त्राः । "यत ईष्ट ईश्वर" इत्यादय ईश्वरविषया अर्थवादाः। "कारणं तु ध्येयस्सर्वैश्वर्यसंपन्नः सर्वेश्वरश्च शम्भुः" इत्यादयः अथर्वशिखायामाम्नाताविधयः। किंच अथर्वशिरसि । अथ कस्मादुच्यते एकोरुद्रः एकएव रुद्रो न द्वितीयाय तस्थे । य इमान् लोकानीशत ईशनीयुः जननीयुः इति । अथ कस्मादुच्यते ईशानो यस्सर्वान् लोकानीशत ईश-

नीभिः जननीभिः परमशक्तिभिः अभित्वाशूरनूनुमोदुग्धा इव धेनवः ईशानमस्य जगतस्सुवर्दृशमीशानमिन्द्रतस्थुषः तस्मादुच्यत ईशान इति । अथ कस्मादुच्यते महेश्वरो यस्सर्वान् लोकान् सम्भक्षस्सम्भक्षयति अजस्रंसृजति विसृजति वासयति तस्मादुच्यते महेश्वरः तमीशानं पुरुषं देवमीड्यम् ॥ इत्यादयश्च । किंच । श्वेताश्वतरोपनिषदि यएको जालवानीशत ईशनीभिस्सर्वाभिर्लोकानीशत ईशनीभिः । एकोहि रुद्रो न द्वितीयाय तस्थुर्य इमान् लोकानीशत ईशनीभिः ॥ विश्वस्यैकंपरिवेष्टितारमोशन्तं ज्ञात्वामृतास्ते भवन्ति सुनिर्मलामिमां शान्तिमीशानो ज्योतिरव्यय इति । जुष्टं यदा पश्यत्यन्यमीशस्य महिमानमेति वीतशोकः । तमीशानं वरदं देवमीड्यं विचार्येमां शान्तिमत्यन्तमेति यईशे अस्य द्विपदश्चतुष्पदःकस्मै देवाय हविषा विधेम इति । सतत्र योह्यमृतईशसंस्थोज्ञस्सर्वगो भुवनस्य गोप्ता ईशे अस्य जगतो नित्यमेव नान्योहेतुर्विद्यतईशनाय । संयुक्तमेतत्क्षरमक्षरञ्च व्यक्ताव्यक्तं हरते विश्वमीशः । क्षरं प्रधानममृताक्षरं हरः क्षरात्मानमीशते देवएकः । इत्यादयः । स ईश्वरो रुद्रोभूत्वा स ईश्वरः प्रमेतोः स ईश्वरः प्रजां पशून् यजमानाय प्रजनयतीत्येवमादयः । माण्डूक्योपनिषद्यपि एष सर्वेश्वर एष सर्वज्ञ इत्यादयः कैवल्योपनिषद्यपि उमासहायं परमेश्वरं प्रभुमित्यादयो योसौ सर्वेषु वेदेषु पठ्यते ह्यत ईश्वरः। अकारो निर्गुणोह्यात्मा। इत्यादि । एषामीशे पशुपतिः पशूनां चतुष्पदामुतच द्विपदामिति ईशस्सर्वस्य जगतः प्रभुः प्री-

णाति विश्वभुगित्यादिभिः बहुधा बहुप्रकारैः विभक्तः भेदं प्राप्त अनपेक्षतया वक्तृप्रामाण्यानपेक्षत्वेन प्रमाणं यश्शब्दराशिः अर्थप्रकाशकवाक्यरूपो वेदोस्ति सोयं विमत्सरविमृष्टपदार्थतत्वः मात्सर्यरहितविद्वत्पर्यालोचितेश्वरादिपदार्थनिजरूपः सन् त्वां केवलमीश्वरं प्रकाशयति प्रकाशनं विदधाति स्मारयतः प्रशंसतो विदधतो वेदवाक्यस्यावबोधनमसाधारणो व्यापार इति प्रकाशयतीत्युक्तम्। अतश्शब्दराशिस्त्वामेव केवलं बोधयति नान्यमित्यर्थः ॥ ३ ॥

व्युत्पत्तिपर्यालोचनया ईश्वरशब्दो नीलकण्ठत्वादिलक्षणं देवं त्वामेवाचष्ट इत्याह शब्दोयमिति ॥

**शब्दोयमीश्वर इति श्रुतिगोचरस्सन्**
**आनीलकण्ठमवतंसितचन्द्रलेखम् ।**
**त्वामेव बोधयति नाथ निजार्थपोषात्**
**अन्यं पुनः प्रकरणादिनिपीडनेन ॥ ४ ॥**

अयमीश्वरशब्दः श्रुतिगोचरः श्रोत्रेन्द्रियविषयस्सन् आनीलकण्ठं कालकूटविषभक्षणादीषन्नीलं कण्ठे यस्येति सप्तम्याः पूर्वनिपाते गड्वादिभ्यः परवचनमिति कण्ठशब्दस्य परनिपातः। अवतंसितचन्द्रलेख शिरोभूषणीकृतशशिकलं त्वामेव निजार्थपोषान्निरतिशयमैश्वर्यन्निजार्थः निरतिशयमैश्वर्यमीश्वरस्यैवेति वायवीयसंहितायां । "ब्रह्मादयोपि लोकानां सृष्टिस्थित्यन्तहेतवः । निग्रहानुग्रहप्राप्तया शिवस्य वशवर्तिनः ॥ शिवः पुनर्नकस्यापि निग्र-

हानुग्रहास्पदं। अतोनिरतिशयमैश्वर्यं तस्यैवेति निश्चयः॥ यच्चेदमीदृगैश्वर्यं तच्च स्वातन्त्र्यलक्षणम्। स्वभावसिद्धञ्चे" त्यादि तस्मादीश्वरादेव ब्रह्मादीनां निग्रहानुग्रहप्राप्तिश्श्रुतिपुराणेषु प्रसिद्धा तथाहि। "हरिं हरन्तमनुयन्ति देवाः विश्वस्येशानं वृषभम्मतीनां" इत्यादि। "योघोरं वेषमास्थाय शरभाख्यम्महेश्वरः। नृसिंहं लोकहन्तारं सञ्जघान महाबलः॥ हरिं हरन्तं पादाभ्यामनुयन्ति सुरेश्वराः। मावधीः पुरुषं विष्णुं विक्रमस्व महेश्वर॥ कृपया भगवान्विष्णुं विददार नखैः खरैः। चर्माम्बरो महावीरो वीरभद्रो बभूवह॥ स एको रुद्रो ध्येयः सर्वेषां सर्वसिद्धये" इति बृहज्जाबालश्रुतिः। तथाच ब्रह्माण्डपुराणे नृसिंहं प्रति वीरभद्रवाक्यम्। "शृणुष्व वचनं मत्तस्तव स्पष्टं वदाम्यहम्। नरसिंह मदोन्मत्त योनिरूपगुणान्वित॥ गतागतिं न जानीषे तामसी खलु ते मतिः॥ किन्नजानासि विश्वेशं संहर्तारं पिनाकिनम्। असद्वादोतिवादश्च वक्तुर्नाशाय केवलम्॥ भविष्यसि न जानासि किंवा संक्षयमेष्यसि। शृणुष्व मदमुत्सृज्य तत्स्वरूपं च चेष्टितम्॥ श्रुत्युक्तं चन्द्रचूडस्य प्राधान्यञ्च स्वतन्त्रताम्॥ प्रकृतिस्त्वं पुमान्रुद्रस्त्वयि तद्वीर्यमाहितम्। पुंसस्सकाशात्प्रकृतौ श्रुत्यर्थोयं सनातनः॥ त्वन्नाभिपङ्कजाज्जातः पञ्चवक्त्रः पितामहः। तस्मिन् त्वयि ब्रह्मणि च स्थितो व्यापी शिवः पुनः॥ सृष्टञ्च जगतां पूर्वं शङ्करं नीललोहितं। ललाटेचिन्तयद्ब्रह्मा ललाटे तोष्य तं शिवं॥ तल्ललाटात्समुद्भूतश्शम्भोस्सृष्ट्यै न दूषणम्। पञ्चभूतात्मकं सर्वं

पूर्वादन्यत्प्रजायते ॥ भूतसृष्टिस्ततस्तस्मादनाद्यन्तेतराभवत् । इयं हि निरता सिद्धा वेदसिद्धान्तपद्धतौ ॥ सृष्ट्यर्थं वरदानार्थं रुद्रोभूत्तल्ललाटजः । त्वं तु भूतेषु कार्यार्थमवतारेषु जायसे ॥ किमेभिर्बहुभालापैश्श्रुतं तेनैति मद्वचः । सामगर्भं यथाशास्त्रघटपृष्ठोदकं यथा अम्शोहं देवदेवस्य महाभैरवरूपिणः । वज्राशनिरिव स्थाणौ त्वयि मन्युः पतिष्यति ॥ त्वत्संहृतौ नियुक्तोस्मि विनयेन बलेन च । दैत्यवक्षो विदार्य त्वं तच्छक्तिकलयान्वितः ॥ अहङ्कारावलेपाभ्यामयुक्तं गर्जसीदृशम् । उपकारोप्यसाधूनामपकाराय केवलम् ॥ यन्निन्दसिमहेशानं त्वां पुनर्बहुमन्यसे । न त्वं स्रष्टा न संहर्ता नस्वतन्त्रोसि कुत्रचित् ॥ कुलालचक्रवच्छक्त्या प्रेरितोसि पिनाकिना । अद्यापि तव पश्य त्वं कपालं कूर्मरूपिणः ॥ शिवहारलतामध्ये क्षिप्तं कस्मान्न बुद्ध्यसे । विस्मृतं किं तदंशेन दंष्ट्रोत्पाटनपीडनम् ॥ वराहविग्रहे तेद्य स्वाक्रोशस्तारकारिणा । दग्धो विद्धस्त्रिशूलाग्रैर्विष्वक्सेनच्छलाद्भवान् ॥ दक्षयज्ञे शिरच्छेदो मया ते यज्ञरूपिणः । अद्यापि तव पुत्रस्य ब्रह्मणः पञ्चमं शिरः ॥ वाराणस्यान्नखच्छिन्नं कपालं पश्य वर्तते । पुरा विजित्य सङ्ग्रामे दधीचस्त्वां मरुद्गणैः ॥ शिरः कण्डूय विसृजद्विस्मृतं तच्च किं त्वया । चक्रं विक्रमसाहाय्यं चक्रपाणे तव प्रियम् ॥ कुतः प्राप्तं कृतान्तेन त्वयैतत्किन्नु विस्मृतम् । पङ्कजार्थेऽर्चितं नेत्रं तावकं वर्तते शिवे ॥ पुण्डरीकाक्षनामाभूस्तदेतत्स्मर वा हरे । यत्तामसकलालेशादृहीतस्त्वं पयोनिधौ ॥ निद्रापरवशश्शेषे कथं

त्वं सात्विको भवेः । ब्रह्मादिस्तम्बपर्यन्तं रुद्रशक्तिविजृम्भितम् ॥ शक्तिमान्परमो देवस्तयैव त्वं विमोहितः । ततस्त्वं तस्य माहात्म्यं युवां द्रष्टुन्नहि क्षमौ" ॥ इत्यादि । पुनस्तत्रैव । "राजन् शृण्वधिकेसरीश शरभं दृष्ट्वाभवत्तक्षणे खद्योतप्रतिमो दिवाकरमुखे शान्तप्रभो विष्ठितः । आदायाक्रम्य पद्भिर्निशितनखमुखैर्मन्दरप्रख्यकायं सर्पं श्येन इवोत्क्षिपन् पुनरिमं गृह्णन्नभस्यम्बुधौ ॥ हरिस्तद्दर्शनादेव विनष्टबलविक्रमः । बभूवोद्यत्सहस्रांशुहतखद्योतवत्कृशम् ॥ अथ प्रहृत्य पक्षाभ्यां नाभौ पद्भ्यां विदारयन् । पादानाबध्य पुच्छेन बाहुभिर्बाहुमण्डलम् ॥ भिन्दन्नुरश्च बाहुभ्यां जग्राह नृहरिं हरः । जगाम गगने भूय आगतै ऋषिभिस्सुरैः ॥ सह सर्वे हरिं विष्णुं हरः श्येन इवोरगम् । उत्क्षिप्योत्क्षिप्य तं गृह्णन्निपात्य च निपात्य च ॥ उड्डीयोड्डीय भगवान्पक्षपातैर्विमोहितम् । गृह्णन्प्रचिक्षिपन्व्योम्नि ययावुड्डीय वेगतः" ॥ इत्यादि । "चिच्छेद बहुशो देवो ब्रह्मणः पञ्चमं शिरः । विष्णोरपिनृसिंहस्य रभसा शरभाकृतिः ॥ बिभेद पद्भ्यामाक्रम्य हृदयन्नखरैः खरैः । यत्प्रसादान्मयालब्धं प्राजापत्यमिदं पदम् ॥ ईशो वृक्ष इव स्तब्धो य एको दिवि तिष्ठति । तेनेदमखिलं पूर्णम्"। इति वायवीयसंहितायां । विष्ण्वादीनामनुग्रहप्राप्तिर्महाभारते श्रूयते। "ततो गच्छेत्सुवर्णाभं त्रिषु लोकेषु विश्रुतम् । तत्र विष्णुः प्रसादार्थं रुद्रमाराधयत्पुरा ॥ वरांश्च सुबहूंल्लेभे दैवतेषु सुदुर्लभान् । उक्तश्च त्रिपुरघ्नेन परितुष्टेन भारत ॥ अपिचास्मत्प्रिय-

तरो लोके कृष्ण भविष्यसि । त्वन्मुखं च जगत्सर्वं भविष्यति नसंशयः''॥ इति । आरण्यपर्वणि । ''सुदुर्लभान्देहि वरानभीष्टानभीष्टदोयः कार्षीरिहत्वम् । व्यासः । तस्मै वरानचिन्त्यात्मा नीलकण्ठः पिनाकधृक् । विष्णवे देवमुख्याय प्रायच्छद्वरमुत्तमम्॥ मत्प्रसादान्मनुष्येषु देवगन्धर्वयोनिषु । अप्रमेयबलात्मा च नारायण भविष्यसि ॥ एवमादीन्वरान्लब्ध्वा प्रसादादेव शूलिनः । स एषदेवश्चरति मायया मोहयन्जगत् ॥'' इति द्रोणपर्वणि ॥ अतोतिशयमैश्वर्यं निजार्थं तस्य परितोषात्सम्बन्धादीश्वरं बोधयति अवगमयति ईश्वरशब्दो योगरूढस्सन्त्वामेवाभिधत्त इत्यर्थः । अन्यं पुनः प्रकरणादिनिपीडनेन प्रकरणादिभिः प्रकरणलिङ्गौचित्त्याद्वापदपदान्तरसमभिव्याहारादिभिर्निपीडनं मुख्यार्थत्यजनं तेन बोधयति ॥ ४ ॥

अथ व्युत्पत्यनाकलनेप्यभिधानवृत्यैवायं शब्दस्स्वयमेवाभिधत्त इत्याह—

शब्दस्तवायमभिधानमनन्यशब्दो
नैरवण्डुकाश्शिवपदादिवदेनमाहुः ।
यस्तु स्वभावकृतमेव तु पूज्यभावं
ब्रूते महेश्वर महान्परमश्च शब्दः ॥ ५ ॥

अयमीश्वरशब्दश्शिवादिपदवत्तवाभिधानमभिधातृताबोधकन्नामधेयमनन्यशब्दः अनन्यवाचकः ईश्वरशब्दस्यानन्यवाच-

कत्वं सर्वदर्शिभिः काळिदासैरप्युक्तम् । "वेदान्तेषु यमाहुरेकपुरुषं व्याप्यस्थितं रोदसी यस्मिन्नीश्वर इत्यनन्यविषयश्शब्दो यथार्थाक्षरः । अन्तर्यश्च मुमुक्षुभिर्नियमितप्राणादिभिर्मृग्यते स स्थाणुस्स्थिरभक्तियोगसुलभो निश्श्रेयसायास्तुवः ॥" "हरिर्यथैकः पुरुषोत्तमस्स्मृतः महेश्वरस्त्र्यम्बक एव नापरः । तथा विदुर्माम्मुनयश्शतक्रतुं द्वितीयगामी नहि शब्द एष नः॥" इत्यादि । नैखण्डुकाश्च निगमयन्ति एकत्र सम्भूयाम्नातार्थमितिनिपूर्वाद्गमेर्ण्यन्तार्थवृत्तेःनिसितमिगमीत्यादिना औणादिके तुनि सति निगन्तवस्सन्तः पृषोदरत्वाद्गकारस्य स्थाने खकारे कृते नकारतकारयोस्स्थाने णकारटकारयोः कृतयोः निघण्टव उच्यन्ते तानधीयते विदन्ति वा क्रतूत्थादित्वाट्ठकि सति तस्य इसुसुक्तान्तात्क इति कादेशः नैघण्टुकाः एनमीश्वरपदं शिवादिपदवत्त्वदभिधानमाहुः । "शम्भुरीशः पशुपतिश्शिवश्शूली महेश्वरः । ईश्वरश्शर्व ईशानश्शङ्करश्चन्द्रशेखरः" । इत्यमरः । अत एव । "उमा कात्यायनी गौरी काळी हैमवतीश्वरी" । इत्यपि । यद्येवमीश्वरशब्दविशेषणभूतौ यौ महत्परमशब्दौ तौ व्यावर्त्याभावादनर्थकौ स्यातां । अत आह वस्त्विति नैतावीश्वरशब्दार्थस्यान्ययोगव्यच्छेदकौ किन्त्वयोगव्यवच्छेदकौ अत ईश्वरशब्दार्थवस्तुस्वभावकृतं पूज्यत्वमेव ब्रुवाते । अपिच बालकव्यवहारेपि विरहासहिष्णुना बालकेन कुत्रगम्यत इति पृष्टे तातेनोक्तं देवालयं प्रतीति । तथापि पृच्छ्यते बालकेन विष्ण्वालयं प्रति वा ईश्वरालयं प्रति

वेति तस्मादीश्वरशब्दस्य शिवैकवाचित्वं प्रतिपादितं। तथाच वायवीयसंहितायां। "शिवमेवेश्वरं ज्ञात्वा शान्तिमत्यन्तमृच्छती" ति ॥ ५ ॥

ननु प्रकर्षवाचिनोरेतयोः कथं पूजावाचित्वमित्याशङ्क्य प्रकर्षवाचिनावप्येतौ पूज्यमानेन समस्यमानौ सन्तौ पूजावाचिनावेवेत्याह—

**यस्योपसर्जनमसौ परमो महान्वा**
**शब्दस्तदर्थमभिधातुमलं प्रकृष्टम्।**
**शब्देन पूज्यवचनेन समस्यमानः**
**पूजां ब्रवीति यदि शब्दविदः प्रमाणम् ॥ ६ ॥**

असौ परमशब्दः महच्छब्दोवा पूजावचनेन समस्यमानौ यस्य विशेष्यस्योपसर्जनं विशेषणत्वादप्रधानं तदर्थं तस्य विशेष्यस्यार्थं प्रकृष्टं प्रकर्षान्वितमभिधातुमलं समर्थं शब्दविदः वैय्याकरणाः। "सन्महत्परमोत्कृष्टाः पूज्यमानैः" इति पाणिनीयसूत्रमित्यर्थः प्रमाणं यदि असन्दिग्धे सन्दिग्धवचनमेतत् शास्त्राणिचेत्प्रमाणमिति यथाप्रमाणमेवेत्यर्थः। अत एतौ शब्दौ पूज्यमानसमस्यमानौ पूजनमेव ब्रूतः। यदीत्यस्य तु शब्दस्य समस्यमान इति पदस्यानन्तरमेवान्वयो द्रष्टव्यः ॥ ६ ॥

एवमीश्वरशब्दस्य नीलकण्ठत्वादिविशेषवस्तुनि मुख्यवृत्तितामभिधाय तत्प्रसङ्गाज्जगतो निरीश्वरत्वमनेकेश्वरत्वमन्येश्वरत्वमपिनिराचष्टे ॥

नानीश्वरं भवितुमर्हति विश्वमेतत्
वह्वीश्वरञ्च नितरामयथाप्रमाणम्।
तल्लोकलोकविदितेश्वरवर्जनेन
कोयं भ्रमः कतिचिदीश्वरमन्यमाहुः ॥ ७ ॥

एतद्विश्वमनीश्वरं भवितुन्नार्हति स्वतन्त्वमधिष्ठातारञ्चेतनमन्तरेण भूधरादेरचेतनस्य जन्मासम्भवात्तस्माच्चेतनरूपादीश्वरादेव जगदुत्पत्तिः। ननु ईश्वरसद्भावे प्रमाणोपपत्तौ सत्यान्तत्सर्वन्तथास्यात्तदेवतु न दृश्यत इति चेन्नह्येष पुरो वर्तते नापराधः यदेनमन्धो न पश्यति ।तथा हि । "अचेतनञ्जगत्सर्वं चेतनप्रेरणं विना। प्रवृत्तौ वा निवृत्तौ वा न स्वतन्त्वं घटादिवत्॥ नानैकान्तिकताहेतोः क्षीरे वत्सविवृद्धिवत्। चेतनेन गवा यस्मात्प्रवृत्तं वत्सवृद्धिदम्॥ मृताद्देहात्प्रवृत्तेन प्रवृत्तश्चेत्स्वतः पयः। नाप्ययस्कान्तदृष्टान्तस्साधकोपि प्रवर्तते॥ अयस्कान्तोपि योक्तारमपेक्ष्यैव प्रवर्तते। एवञ्चेच्चेतनास्सन्ति पुरुषास्सन्ति सम्मताः ॥ तेषामेवास्ति कर्तृत्वं किमनेनेश्वरेण तु । अज्ञोजन्तुरनीशोयमात्मायत्तो हि सर्वदा ॥ सोपि सापेक्ष एव स्यात्स्वप्रवृत्तौ घटादिवत्" ॥ किञ्चानुमानान्तरमपि तत्र प्रमाणं विमतं विश्वं विश्ववित्कर्तृपूर्वकं कार्यत्वात् घटवत् । कार्यत्वञ्च सावयवत्वादेवास्य द्रष्टव्यं अत्र ये तावदस्य शरीरित्वं प्रसञ्जन्ति तेषामयमाशयः कथं भवति ईश्वरस्य व्यावृत्तेरकर्तृत्वमापाद्यते चेतन्न बाधापत्तेः ईश्वरं पक्षीकृत्य कर्तृत्वाच्छरीरमापाद्यतेचेत्तदपि न आश्रयासिध्द्यादिदूषण-

ग्रस्तत्वात्। तथाचोक्तं कवितार्किकश्रीमदुदयनाचार्यैः "कार्या योजनाधृत्यादे" रित्यादि तथाचोक्तं चिन्तामणिकारैरपि "क्षित्यादौ कार्यत्वेन घटवत् सकर्तृकत्वानुमाना" दित्यलमतिप्रसङ्गेन बह्वीश्वरश्च नितरां भवितुर्न्नार्हति। विमतं सकर्तृकं कार्यत्वात् घटवदित्यनुमाने सिद्धे कर्तरि स एकोऽनेकोवेति संशये कल्पनालाघवादेक एवेति कल्पिते। बहूनां स्वतन्त्राणां परस्परबुद्धिवैषम्यादसम्भव एव भुवनोत्पत्तेरिति नितरामित्युक्तं विचित्रप्रासादादावनेकदर्शनात्कथं कर्त्रैकनिश्चय इत्यत आह अयथाप्रमाणमिति प्रमाणमनतिक्रम्य वर्तत इति यथाप्रमाणं यथा सादृश्य इत्यव्ययीभावः तन्नभवतीति अयथाप्रमाणमिति नञ्समासः। प्रासादादावनेककर्तृकत्वेऽस्य दृष्टत्वात्तत्र तथास्तु। एतद्विश्वमनेककर्तृकत्वे प्रमाणशून्यमित्यर्थः। ननु क्षित्यादेरेककर्तृकत्वसिद्धिः। कुतः एककर्तृकत्वेन व्याप्त्यभावाल्लाघवेन तस्याप्रमाणत्वात् सकर्तृकमानादेव लाघवहेतुतात्तत्सिद्धिरितिचेन्न। तावदनुमितिमात्रे लाघवं सहकारि व्यभिचारान्मानाभावाच्च नहि लिङ्गपरामर्शेपि तद्विलम्बेनानुमितिविलम्बः येन तत्सहकारि स्यात्। तथाच। नैककर्तृकत्वसिद्धिः। उच्यते यत्र प्रमाणे लघुगुरुविषयता सम्भवति तत्र लाघवं सहकारि कल्प्यं स्यात्ततो लाघवसहकृतान्मानादेवैककर्तृकत्वसिद्धिः। किञ्च कर्त्रैक्यञ्च वेदान्तेष्वपि। "यतोवा इमानि भूतानि जायन्ते"। इति। तद्विजिज्ञासस्वेत्यत्र तदित्येकवचनात्। "तस्मात्सप्तार्चिषस्समिधस्सप्तजिह्वा" इत्यत्र तस्मादित्येकवचनात्। "द्यावापृथीवी

जनयन्देव एक" इत्यत्र एक इत्येकवचनात्सिद्धं । अन्येश्वरत्वञ्च निराचष्टे तल्लोकेति । लोक शब्देन पुराणादिकमुच्यते । लोकवेदयोर्विदितं जगत्कर्तृत्वेन प्रसिद्धः ईश्वरः तस्य वर्जनेन परिहारेण तं परिहृत्येत्यर्थः प्रकृत्यादितृतीयः । कतिचिन्मन्दाः अन्यं हरिहिरण्यगर्भादिकमनीश्वरमीश्वरञ्जगत्कर्तारमाहुरिति यदयं कश्चिद्भ्रमः अनीश्वरस्य जगत्कर्तृत्वकल्पनायां भ्रान्तिरेव कारणं अयं भावः । "ब्रह्मविष्णुरुद्रेन्द्रास्संप्रसूयन्ते न कारणं शम्भुः" । "यो ब्रह्माणं विदधाति पूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै" । "हिरण्यगर्भं पश्यति जायमानं" । इत्यादिषु । ऋषिं प्रसूतं कपिलं यस्तमग्रे ज्ञानैर्विभर्ति जायमानञ्च पश्येत् । हिरण्यगर्भञ्जनयामास पूर्वं । इति । श्वेताश्वतरे । "कर्ताहं सर्वलोकानांमम कर्ता महेश्वरः । तस्य देवादिदेवस्य कर्ता कोपि नविद्यते ॥ अतोहमस्य वामाङ्गे ब्रह्मा चैवास्य दक्षिणे । मुखेभ्यश्चतुरो वेदास्साङ्गोपाङ्गाश्च कृत्स्नशः"। इत्यादि शिवरहस्यागमेषुच । "सहि सर्वजगन्नाथस्सिसृक्षुरखिलञ्जगत् । ब्रह्माणं विदधे साक्षात्पुत्रमग्रे सनातनम् ॥ त्रयस्ते कारणात्मानस्साक्षाज्जाता महेश्वरात् । पित्रा नियमिताः पूर्वन्त्रयोपि त्रिषु कर्मसु" ॥ इति वायवीयसंहितायां । "भवानग्रे समुत्पन्नौ भवान्या सह दैवतैः । वामाङ्गादस्य रुद्रस्य दक्षिणाङ्गादहं प्रभोः॥ भवोसौ जगतान्धाता तवापि च ममापि च। इति। लैङ्गे विष्णुं प्रति शिववचनम्। "मदङ्गस्वेदसम्भूतौ ब्रह्मनारायणाविमौ"। इति। काळिकाखण्डे। "तस्मात्परतरन्नास्ति ज्ञानज्ञेयात्सदाशिवात्

विष्णुर्जातोस्यवामाङ्गे ब्रह्मा चैवास्य दक्षिणे ॥ मुखेभ्यश्चतुरो वेदा स्साङ्गोपाङ्गाश्च कृत्स्नशः'' । इत्यादि । पाद्मपुराणे । "ईश्वरश्चेतनः कर्ता पुरुषः कारणं शिवः । विष्णुर्ब्रह्मा शशी सूर्यो देवताश्चैव सान्वयाः ॥ सृजते ग्रसते चैव तमोभूतमिदं यथा । अप्रज्ञातमिदं सर्वं तदाह्येको महेश्वरः" ॥ इत्यादि । महाभारते शान्तिपर्वणि । "सर्वतत्वविधानज्ञः प्रधानपुरुषेश्वरः । योसृजद्दक्षिणादङ्गाद्ब्रह्माणं लोकसम्भवम् ॥ वामपार्श्वात्तथा विष्णुं लोकरक्षार्थमीश्वरः । युगान्ते तु समापन्ने रुद्रं प्रभुरथासृजत्" ॥ इति । आनुशासनिके पर्वणि । "ब्रह्मविष्णुशिवास्सर्वे स्थावराणि चरिष्णवः । सम्भूतान्येव भवतो विलीनानि भवन्त्यहो" ॥ इति । स्कान्दे हरिहिरण्यगर्भयोरीश्वराद्रुत्पत्तिश्रवणात् । "जगच्च कर्तृसापेक्षं कार्यं सावयवं यतः । तस्माच्छश्वतन्त्रोयस्सर्वशक्तिश्च सर्ववित् ॥ अनादिनिधनश्चायम्महदैश्वर्यसंयुतः । स एव जगतान्धाता महादेवो महेश्वरः" ॥ इति । ईश्वरस्यैव जगत्कर्तृत्वश्रवणाच्च । "हिरण्यगर्भस्समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् । अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते" । इत्यादीनां हिरण्यगर्भपरमपुरुषयोः जगत्कर्तृत्वप्रतिपादकवचनानां विश्वामित्रवज्जगदेकदेशकर्तृत्वेनाप्युपपत्तेः कार्यकोटिप्रविष्टानां सर्वजगत्कर्तृत्वासम्भवात् तेषां सर्वजगत्कर्तृत्वकल्पना भ्रान्तिमूलैव भवतीति यदतः सर्वज्ञस्सर्वकर्ता परमेश्वर एव विश्वाधिक इति सिद्धम् । अस्त्वेवं तथापि तस्याप्यधिष्ठाता कश्चन भवितुमर्हतीति

यत् तद्वक्तुन्तथा शक्यते । नहि सर्वज्ञसर्वकर्तृत्वमन्तरेणान्यः प्रकर्षस्संपद्यते । ननु "सर्वज्ञस्यापि च यथाशक्त्या सर्वज्ञता भवेत् । यया विना न सर्वज्ञस्सोपि तस्मै नमोस्तु ते"। इति। पुराणवाणी यद्येवंतस्यापि प्रकर्षस्तस्याप्येवं प्रकृतानवस्थितिरिति तरतमादि प्रतिपाद्यमोक्षभेदावस्थितेः अनवस्था एवमुक्त्वा भवेन्नतु परमेश्वरादाधिक्यम् । एवं कल्पितव्यपदेशमात्रभेदस्य न क्वचिदप्यपसृतिरिति । तथा च श्रुतिः । "ततो यदुत्तरतरन्तदरूपमनामयम् । न तस्य कार्यं करणञ्च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते ।। परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकीज्ञानबलक्रिया च ॥ न तस्य कश्चित्पतिरस्ति लोके नचेशिता नैव च तस्य लिङ्गम् ॥ स कारणं करणाधिपाधिपो नचास्य कश्चिज्जनिता न चाधिपः" ॥ इत्यादिभिरपि परमेश्वरस्य सर्वजगत्कर्तृत्वं सर्वेश्वरत्वञ्च सिद्धम् ॥ ७ ॥

एवं वादिषु चान्येश्वरवादिनं न कञ्चिदप्युपलभामहे इदानीं पद्मासनादीनान्निरीश्वरशब्दवाच्यत्वात्तैरिदं विश्वं सेश्वरं नकोपि वदति वदन्वादी स्ववचनादेव पराहन्यते । इत्याह विश्वमिति ॥

**विश्वं निरीश्वरमिदञ्जगदाह साङ्ख्यो**
**योगश्च सेश्वरमुभावनुवादिनो ऽन्ये ।**
**नत्वेन सम्भवति सेश्वरतां ब्रुवाणः**
**पद्मासनादिभिरनीश्वरशब्दवाच्यैः ॥ ८ ॥**

साङ्ख्यः साङ्ख्यशास्त्रकर्ता कपिलः जगदिदं निरीश्वरमीश्वररहितमाह। जगदुत्पत्तिस्त्वव्यक्तादचेतनादेवेति तदुक्तं वत्सवृद्धिनिमित्तं क्षीरस्य यथा प्रवृत्तिरस्य पुरुषस्य विमोक्षनिमित्तं प्रवर्तते तद्वदव्यक्तमिति। मोक्षशब्दो भोगस्याप्युपलक्षणं पुरुषभोगापवर्गाभ्यां प्रधानप्रवृत्तिरिति। योगो योगशास्त्रकर्ता हिरण्यगर्भः सेश्वरं विश्वमाह। तत्र सेश्वरं विश्वमित्यत्यनुमानादेवेति वक्तव्यं अनुमानमात्रस्यासम्भावितार्थविषयत्वमिति। ये तु विप्रतिपन्नास्तान्प्रति भगवती श्रुतिरेव तत्र प्रमाणं। तथा हि। ईश्वरेशानादिपदादेव तत्सिद्धिः। एवञ्च सामान्यतस्सिद्धे कोस्यार्थ इति व्युत्पित्सोस्सति विचारे निश्चयस्स्वर्गादिपदवत्। "उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः। यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः"॥ इत्यर्थवादाद्वाक्यशेषाद्वा परमेश्वरचिन्तामधिकृत्यश्रुतिश्च श्रूयते। "सर्वज्ञता तृप्तिरनादिबोधस्स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः। अनन्तशक्तिश्च विभोर्विधिज्ञाष्षडाहुरङ्गानि महेश्वरस्य"॥ इति। अत्यल्पमिदमुच्यते कृत्स्नोहि वेदस्तावदीश्वरगोचरः। तथा हि। विभूत्या रुद्रे प्रपञ्चं पुरस्कृत्य निष्प्रपञ्चतया उपनिषत्सुपास्यत्वेन सर्वत्रेति एषां सर्वेषामन्यत्र तात्पर्यकल्पनेति चेत् तत्स्वार्थप्रतिपादनद्वारा चेत्तर्हि स्वार्थेऽपि प्रामाण्यमभ्युपेयं तदर्थस्यानन्यप्रमाणत्वात् शब्दमात्रतया चेत्तर्हि स्वर्गनरकस्वरूपप्रतिपादकानामप्रमाण्यं स्यात् तदर्थानामप्रवृत्तौ विधानानर्थक्यापत्तिरिति चेदत्रापि तदुपासनविधानानर्थक्यप्रसङ्ग

உபாசிக்கப்படும் பொருளினது உருவஞ் சிவரூப
மென்பதூஉம், மீமாஞ்சகர்கூறும் உபக்கிரமோப
சங்கார நியாயம்பற்றித் துணியப்படும், அதன்
கண் உபாசனையைக்கூறிய தொடங்கிய உபக்கிர
மத்தின்கண்ணுள்ள வாக்கியஞ் சிவரூபங்கூறி
முடிந்த உபசங்கார வாக்கியத்தோ டியைந்து
நஅ ஒரு பொருள் படுதலின். இங்ஙனந் துணியப்
படவே, ஆண்டு நாராயணனுக்கு உபாசிக்கப்
படுந்தன்மையும் உபாசனையாந்தன்மையும் ஒராற்
றானும் பொருந்தாமையின், அவன் அவ்விரண்டு
மல்லனென்பதூஉம், பாரிசேடத்தால் உபாசக
னென்பதூஉம், போதரும். அல்லதூஉம், ஆண்டு
"நாராயணனுடைய இருதயாக்கினியின் சிகா
மத்தியிற் பரமான்மாவுளன்" என்ற வாக்கியமே
வேறு பிரமாணம் வேண்டாது, அவனுபாசக
நகூ னென்பதை வலியுறுத்தும். அது வலியுறுத்து
மாறு என்னையெனின்: "நாராயணனுடைய
இருதயத்திற் பரமான்மா உளன்," என்று

---

பேஷஜஸ்ய | யக்ஷ்வா மஹே ஸௌமநஸாய ருத்ரம் நமோபிர்
தேவமசுரம் துவஸ்ய' (ருக்வே. ரு. சயஉ. கக) என்பது.

உபாசனையைக் கூறிய பகுதியாவது நாராயணோப
நிடதத்துவரும் 'ஸஹஸ்ர சீர்ஷம் தேவம்விச்வாக்ஷம் விச்வ
சம்புவம்' என்று தொடங்கும் பகுதி.

'நாராயணனுடைய இருதயாக்கினியின் சிகாமத்தியிற்
பரமான்மாவுளன்' என்ற வாக்கியமாவது:—'தஸ்யா சிகாயா
மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:' என்பது.

கூறினமையின், அவனைப் பரமான்மாவென்றல் பொருந்தாமையி னென்க. நாராயணன் றன திருதயாக்கினிக்க ணிருந்துகொண்டு தானே தன்னை யுபாசிப்ப னெனின், அக்கூற்றியாவர்க்கு நகைவிளைக்கு மென் றொழிக.

அற்றேலஃதாக; நாராயணன்மேல்வைத்து உபாசனையை வருணித்தவாறு என்னையெனின்;- நாராயணனுடைய விருதயமும், அதன் கட்டகரமும், அதன்கட் பெரிய அக்கினியும், அதன் சிகாமத்தியிற் பரமான்மாவு முண்டென் றங்ஙன மருத்தவாதம்படக் கூறுமுகத்தானே, ஆசரிப்பவருக்குச் சிரத்தை போதர விசிட்டபுருடன்மேல் வைத்து, உபாசனையை விதித்தவாறென்க. ச0

அற்றேல், ஆண்டு இருதயம் வேறோதப்பட்டதனுன் அது நாராயணனுடைய தென்றல் பொருந்தாதாம்பிறவெனின்;—அற்றன்று. நாராயணப்பிரகரணத்திற் கூறப்பட்ட விருதயம் பிறரைச்சார்தற் கியைபின்மையின் அஃது அவனுடைய தென்றல் பொருந்துமென்க. சக

அற்றே லஃதங்ஙனமாக; யதிப்பிரகரணத்திற்பூர்வாநுவாகத்தான் விதிக்கப்பட்ட உபாசனை யாவர்கண்ணதெனின், ஆண்டை யியைபு பற்றி ஆராய்வார்க்கு அதுவுஞ் சிவபிரான்கண்ணதென்பது தெற்றெனப்புலப்படுமென்க. அஃ சஉ

தேல், ஆண்டு நாராயணனைப் "பரப்பிரமம்" என்றும், "பரஞ்சோதி" என்றும், "பரதத்துவம்" என்றுங் கூறுதன் மலைவாம்பிறவெனின்;— அற்றன்று: மாந்திரிகன் கருடபாவனையாற் கருடனோ டத்துவிதமாய் நின்றவழி அக் கருடனென்றே கருதப்படுதல்போல நாராயணன் சிவபாவனையாற் சிவபிரானோ டத்துவிதமாய் நின்றவழி அங்ஙனம் உபசரிக்கப் பட்டானாகலின்,

சங மலைவுயாண்டையதென்க. இவ்வொற்றுமைபற்றியன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன் "யானே உலகெல்லாமாயினேன்" என்றதூஉம், சிவபிரானது விசுவரூபத்தைத் தான்காட்டியதூஉம், "ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக" என்றதூஉம், அதனை உறுதியாகக் கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன்மே விட்ட

---

சஉ. நாராயணனைப் பரப்பிரமமென்றும் பரஞ்சோதியென்றும் பரதத்துவமென்றுங் கூறும் மந்திரம்:—'நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண:பர:' எனவும் 'நாராயணபரோ ஜோதிராத்மா நாராயண:பர:' எனவும் வருவன.

சங. 'இவ்வொற்றுமை பற்றியன்றே' என்பது முதல் 'சிவபிரான் திருமுடி மேற்கண்டதூஉ மென்க' என்பது வரையுள்ள பகுதி ஸ்ரீ சிவஞான சுவாமிகள் சிவஞான பாடியத்து அருளிச் செய்யப்பட்டதாகும். (இரண்டாஞ் சூத்திரத்து முதலதிகாரணவுரையிற் காண்க)

போதுகள் சிவபிரான் றிருமுடிமேற் கண்டதூஉ மென்க.

அற்றேல், ஆண்டுப் பரமான்மாவின் விபூதி சச யில் வைத்துப் பிரமன் முதலிய தேவரோடு சிவ பிரான்படிக்கப்படுதன் மலைவாம் பிறவெனின்;- அற்றன்று : ஆண்டுப் பரமான்மாவின் விபூதி யில்வைத்துப் பிரமன் முதலிய தேவரோடு படிக் கப்பட்டமையின் சிவசத்தத்தா னுணர்த்தப்படுப வன் சங்காரத் தொழிலைச்செய்யும் அரனென் பது தெள்ளிதிற் பெறப்படுதலினானும், ஆண்டுப் பரமான்மா வெனப்பட்டவர் அயன் அரி அரனென்னுந் திரிமூர்த்திகளையு நியமிக்குந் துரிய மூர்த்தியாகிய சிவபிரானாகலானும், சிருட்டித் தொழில் திதித்தொழில்களைச் செய் யும் அயனரிபோற் சங்காரத் தொழிலைச் செய்

---

சச. பரமான்மாவின் விபூதியில் பிரமன் முதலிய தேவரோடு படிக்கப்படுபவர் சங்காரத் தொழில் செய்யும் அரனே: அவர் சிவசத்தத்தாற் கூறப்படுகின்றனர். அம்மந் திரமாவது:—'ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ரஸ்ஸோக்ஷர: பர மஸ்ஸ்வாரட்' (நாராயணோபநிடதம்) என்பது. இக்காலத்தார் 'ஸ ஹரி:' எனச் சேர்த்துப் படித்தல் இடைச்செருகல்.

சிவபெருமான் மும்மூர்த்திகளையும் நியமிப்பவரென் பது 'த்ர்யம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்தநம் | உர் வாருகமிவ பந்தநாந் ம்ருத்யோர் முக்ஷீயமாம்ருதாத்' (ருக்வே. எ. ருசு. கக.) எனவரும் மந்திரத்தானறியப்படும். இம்மந் திரத்து வருந் திரியம்பக சப்தம் மூவர்க்கும் பிதா எனப் பொருள்படும். முதனூலின் சருவது சுலோகவுரை பார்க்க.

யும் அரனும் அவரது விபூதியே யாகலானும் மலைவு யாண்டையதென்பது.

அற்றேல், ஆண்டுப் பரமான்மாவின் விபூதியில் நாராயணனைப் படியாத தென்னையெனின்;— கைவல்லியோபநிடதத்திற் கூறிய தகரவித்தையில் அவனும் விபூதியிற் படிக்கப்பட்டானாகலின் இவ்வுபநிடதத்திற் படியாதுய்த்துணர வைத்ததென்பது.

சரு சிவபிரான் விச்சுவாதிகர்; நாராயணன் விசுவம். அவர் யாகத்துக்கதிபர்; அவன் யாகம். அவர் மூலப்பிரகிருதிக்கு நிமித்தகாரணர்; அவன் மூலப்பிரகிருதி. இங்ஙனமாகலின், இருவர்க்கும் வேற்றுமை பெரிதென்க.

---

சிவபெருமான் துரியமூர்த்தி யென்பது 'மும்மூர்த்திகளுங் காரணரல்லர் சிவனொருவனே காரணன்' எனவரும் அதர்வசிகோபநிடதத் தாலறியப்படும்.

தகரவித்தையில் நாராயணன் பரமான்மாவின் விபூதியில் வைத்துப் படிக்கப்படுதலை 'ஸ ப்ரஹ்மா ஸசிவ: ஸேந்த்ர: ஸோக்ஷர: பரம: ஸ்வராட் | ஸஏவ விஷ்ணு: ஸ ப்ராண: ஸகாலோ அக்நி: ஸசந்த்ரமா||' எனவருங் கைவல்லியோபநிடதமந்திரத்தாலறிக.

சரு. சிவபிரான் விசுவாதிகரென்பது 'விச்வாதிகோருத்ரோ மகர்ஷி' என்னும் மந்திரத்தானும் நாராயணன் விசுவமென்பது 'விச்வம் நாராயண: பர:' என்னு மந்திரத்தானு மறியப்படும். சிவபிரான் யாகாதிபதி யென்பது 'மேத

அற்றேல், நாராயணனை "விசுவபதி" என்ற சசு
தென்னையெனின் ;—அது துதிவாத மென்க. சஎ
வேதத்தி னெரோவழிச் சிவபிரானை "விசுவம்"
என்றது, அவர் அதனை அதிட்டித்திருத்தல்
பற்றியாகலின், அஃதுபசார மாத்திரையே
யென்க. இவ்வுண்மை வேதரகசியத்தையுணர்ந்த
பண்டிதர்க்கே விளங்கும். அது முற்றுணர் வெய் சஅ
திய காத்தியாயன முனிவர் கிருகியசூத்திரத்தில்
எல்லாப்பொருளுஞ் சிவபிரானால் அதிட்டிக்கப்
படுதல் பற்றி எல்லாக் கிரியையினும் அவர்க்கு
வணக்கங் கூறியதனானும், அதனை வலியுறுத்தற்
பொருட்டு "எல்லாப் பொருளு முருத்திரன்"

---

பதிம் ருத்ரம்' எனவரும் ருக்வேத மந்திரத்தானும் நாராய
ணன் யாகமென்பது 'யக்ஞோவை விஷ்ணு:' எனவரும்
மந்திரத்தானும் அறியப்படும். சிவபிரான் மூலப்பிரகிருதிக்கு
நிமித்தகாரணரென்பது 'ய: காரணாநி நிகிலாநி தாநிகாலா
த்மயுக்தாந் யதிதிஷ்டத்யேக:' என்னும் மந்திரத்தானும்
நாராயணன் பிரகிருதி யென்பது 'வாஸுதேவ: பராக்ருதி:'
என்னும் மந்திரத்தானும் அறியப்படும்.

சசு. நாராயணனை விசுவபதி யென்னும் மந்திரமாவது:-
'பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்' எனவரும் நாராயணோப
நிடத மந்திரம்.

சஎ. சிவபெருமான் விசுவமெனப்படுவது 'ஸர்வோ
வை ருத்ர :' என்னும் மந்திரத்தாலறியப்படும்.

சஅ. காத்தியாயனர் கிருகிய சூத்திரத்தில் 'நமோ
ருத்ராய பதிஷதே ஸ்வஸ்தி மா ஸம்பாரய' 'நமோ ருத்ராய

என்னும் அநுவாகத்தை உதாகரித்தமையானும் விளங்கும். சிவபிரானை "விசுவம்" என்றதை உபசார மென்றறிய மாட்டாது, உண்மை யென்று மயங்குவாரு முளர்.

சகூ இங்ஙனம் உபாசனையும், உபாசகனும்,உபாசிக் கப்படும் பொருளாகிய விரூபாக்கரும், அவருடைய நாநாவித விபூதியும் நாராயணோப நிடதத் தாற் போந்தவாறு காண்க.

ருo அற்றேலஃதாக; சிவபிரானைப் பிரதி பாதிக்கு மிது நாராயணோபநிடத மென்றாயவா றென்னை யெனின்;—புருடசூத்தம் நாராயணனை இருடியாக வுடைத்தாயவாறு போலச் சிவபிரா

---

வநஸ்பதிஷதே ஸ்வஸ்திமா ஸம்பாரய' 'நமோ ருத்ராய பித்ரு ஷதேஸ்வஸ்திமா ஸம்பாரய' முதலாகக் கூறுதல் காண்க.

சகூ. இந் நாராயணோப நிடதப் பொருளைச் சிவஞான சுவாமிகள், 'சேந்தபொற் குண்டத் தோங்குஞ் சிகைத்தழன் மிசையே கம்ப, வேர்தையா வாகித் தேத்தும் புகைபொதி வேள்விச் சாலே, யேய்ந்தசீர்த் தகர வித்தை முறைப்படி யிதய கஞ்சப், பூந்தழற் சிகைமே லீசற் போற்றுமா யவனை யொக் கும்' என்றருளிச் செய்தமைகாண்க. (காஞ்சிப் புராணம். திருநகரப்படலம். கககூ-வது செய்யுள்)

ருo. புருட சூக்தத்தின் இருடி நாராயணனென்பது 'ஸஹஸ்ரசீர்ஷேதி ஷோட சர்சஸ்ய ஸூக்தஸ்ய நாராயண: புருஷோ நுஷ்டு பந்த்யாத்ரிஷ்டுப்' என்பதனுனறிக.

எச்சம்—யாகம்.

னைப் பிரதிபாதிக்கு மிது எச்சரூபனுகிய நாரா யண இருடியினன் உபதேசிக்கப்பட்டமையின், நாராயணேபநிடத மென்றாயதென்க.

இவ் வுபநிடதஞ் "சிவபிரானிடத்தினின்றும் ௫௧ இரணியகருப்பன் றேவர் யாவர்க்கு முதற்கட் டோன்றினன்" என்று கூறுகின்றது. இங்ஙன மாகவும், "நாராயணனிடத்தினின்றும் இரணிய கருப்பன் றோன்றினன்" என்றும், "அவனிடத் தினின்றுஞ் சிவபிரான்றோன்றினர்" என்றும், அறிவில்லார் பிதற்றுப. சிவயோகிகளுடைய ௫௨ இருதயமுதலிய வைந்திடத்தினுஞ் சிவபிரானுக் குத் தோற்றரவுண்மையின், இரணியகருப்ப னுடைய இலாடமத்தியிற் சிவபிரான் றோன்றி யருளின ரென்னும் வழக்காற் போதரும் இழுக் கென்றே வென்பது.

திரு உருத்திரத்துட் டுருவைந் தெழுத் ௫௩ திருத்தல் போலச் சிவமந்திரங்கட்குயிராய்ச் சிவ

---

௫௧. சிவபிரானிடத்தினின்றும் இரணிய கருப்பன் றேவர்யாவர்க்கு முதற்கட் டோன்றினனென்னும் மந்திர மாவது:—'யோ தேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத் விச்வாதி கோ ருத்ரோ மகர்ஷி: | ஹிரண்யகர்பம் பச்யத ஜாயமாநம் ஸநோதேவச் சுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து' என்பது. 'அய னைப் படைத்த பரமன்' என்பது தமிழ் வேதம்.

௫௨. இருதய முதலிய ஐந்திடமாவன:—இருதயம், காது, பிரமரந்திரம், நாக்கு, புருவநடு என்பன.

௫௩. மந்திரத் திருமேனியாயுள்ள பஞ்சப்பிரமமந்திர மாவது:—'ஸத்யோ ஜாதம் ப்ரபத்யாமி ஸத்யோஜாதாய

பிரானுக்கு மந்திரத் திருமேனியாயுள்ள பஞ்சப் பிரமம் இதனகத்துண்மையின், இது மகோபநிடதமெனவும் பெயர் பெறுமென்க.

ருச இனிப் பஞ்சப்பிரம மந்திரத்துளொன்றாகிய ஈசான மந்திரம் சிவபிரான் "வித்தையெல்லாவற்றிற்கு மீசர்" என்றும், "பூதங்களெல்லாவற்றிற்கும் பதி" என்றும், "பிரமாவுக் கதிபதி" என்றும், "பிராமணருக்கதிபர்" என்றுங் கூறு

---

வைநமோ நம:। பவே பவே நாதிபவே பவஸ்வமாம்। பவோத் பவாயநம:॥ வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய நம: ச்ரேஷ்டாய நமோ ருத்ராயநம: காலாயநம: கலவிகரணாய நமோ பலவிகரணாய நமோ பலாயநமோ பலப்ரமதநாயநம: ஸர்வ பூததமநாய நமோ மநோந்மநாய நம:॥ அகோரேப்யோ அத கோரேப்யோ: கோரகோரதரேப்ய:। ஸர்வேப்ய: ஸர்வ சர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ரரூபேப்ய:॥ தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி। தந்நோ ருத்ர: ப்ரசோதயாத்॥ ஈசாந: ஸர்வவித்யா நாமீச்வர: ஸர்வ பூதாநாம் ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோ அதிபதிர் ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம் ॥என்பது. இம்மந்திரங்களையே முப்பத்தெட்டுக் கலைகளாகப் பிரித்துச் சிவபிரானுக்கு நியாசஞ் செய்யுமாறு சிவாகமம் அருளிச் செய்கின்றது.

ருச. வித்தையெல்லாவற்றிற்கு மீசர் 'ஈசாந: ஸர்வ வித்யாநாம்' என்பதனுனும், பூதங்களெல்லாவற்றிற்கும் பதி 'ஈச்வர: ஸர்வபூதாநாம்' என்பதனுலும், பிரமாவுக்கதிபதி 'ப்ரஹ்மாதிபதி:' என்பதனுனும், பிராமணருக்கதிபர் 'ப்ரஹ்மணோ அதிபதி:' என்பதனுனும் அறியப்படும்.

கின்றது. இதன்கட் "பிரமாதிபதி" என்ற ருரு தற்கு, வேதத்திற் கதிபதி என்றுரைப்பாரு முளர். மேல் "வித்தையெல்லாவற்றிற்கு மீசர்" என்றதனுற்றுனே வேதமும் அதன்வழித் தோன்றிய பிறவித்தைகளும் அடங்குதலின், அது போலியுரை யெனமறுக்க.

இருக்கு முதலிய வேதத்திரய நிதிக்குக் கோச ருசுமாகிய மண்டலத்திலிருக்கும் ஆதித்தனை அதிட்டித்திருக்கும் புருடனாகிய சிவபிரானை ஆதித்

---

ருசு. ஆதித்தியோப நிடதத்தில் 'ஏஷ பூதாநாமதி பதிர்ப்ராஹ்மண:' என வருதல் காண்க. பாஞ்சராத்திரிகள் 'த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸ்ந் நிவிஷ்ட:। கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடஹாரீ ஹிரண்மயவபுர்த்த்ருத சங்க சக்ர:॥' என்னும் வசனம் பற்றி ஆதித்தியாந்தர்யாமி நாராயணனென்பர். ஆதித்தியாந்தர்யாமி சிவபெருமானே என்பதற்கு மேலேகாட்டிய பிரமாணங்களெல்லாம் வேதபடிதமானவை. அவ் வசனங்களின்முன் இங்கே காட்டப்பட்ட ஸ்மிருதிவசனம் துர்பலமுற்று ஒழியும்; முன் கஎ-வது சுலோக விளக்கத்திற் காட்டப்பட்ட 'ஆகாசாத் பதிதம் தோயம்' என்று தொடங்கும் வசனம்போல. இவ்வுண்மை யறியார் அவர் காட்டிய வசனம் வேதவசன மென மயங்குப. கூரேசவிஜய மென்னும் நூலில் காயத்திரி மந்திரப் பொருள் நாராயணரென்று கூறவந்த இடத்து இம்மிருதி வசனத்தை வேதவசன மெனக் கொண்டு 'தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ' என்னுஞ் சாந்தோக்கியச் சுருதியோடிணைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. அந்நூலிற் கூறப்பட்ட காரணங்களனைத்தும் போலியேயாம்.

தியோப நிடதம் "இவனே பூதாதி பதி" என்று
ருள சுட்டிக் கூறுநின்றது. "இவனே பூதாதிபதி"
என்றன் மாத்திரையானே ஆதித்தியாந்தரியாமி
சிவபிரானென்பது துணியப்படாதாம் பிறவெ
னின்;—அற்றன்று: "இரணியமயன்" என்றும்,
"இரணிய வாகு" என்றும், "அம்பிகாபதி"
என்றும், "உமாபதி" என்றும், அவ்வுபநிட
தங் கூறுதலின், ஆதித்தியாந்தரியாமி சிவ
பிரானே யென்பது தெற்றெனத் துணியப்படு
ருஅ மென்க. மண்டலமும், அதிலாதித்தனும், அவற்
கதிட்டாதாவாகிய சிவபிரானும், அவர் விபூதி
யும், அவற்றினை யுணர்ந்தாரெய்தும் பயனு

---

நீலகண்டபாடியத்து அந்தராதிகரணத்தில் இம்மிருதிவசனம் ஆராயப்பட்டு 'த்யேயஸ்ஸதேத்யாதி லௌகிக வசநம் பாக்த மேவ' என்று ஓதுக்கப்பட்டது. முதனூலின் ருசு-வது சுலோக வியாக்கியானத்திலும் சிவலிங்கபூபதி இம்மிருதி வசனத்தின் அப்பிராமாண்யத்தை விளக்கினர்.

ருள. இரணியமயன் என்பது 'ஏஷாநந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:' என்பதனாலறியப்படும், இரணியவாகு அம்பிகாபதி உமாபதி யென்பன 'நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ஹிரண்யபதயே அம்பிகாபதய உமாபதயே பசுபதயே நமோ நம:' என்னும் மந்திரத்தாலறியப்படும். சாந்தோக்கிய உபநிடதத்தும் 'ய ஏஷோ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே ஹிரண்யச்மச்ருர் ஹிரண்யகேச ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:||' எனக்கூறப்பட்டது.

மென்னுமிவை, ஆதித்தியோப நிடதத்தாற் போதரும் பொருள்களாம். இதனை யுணர்ந்தார் ௫கூ காயத்திரியையு முணர்ந்தாரேயாவர்.

இனிக் காயத்திரிக்குரிய பொருள் சிவ கூ0 பிரானே யெனத் துணிதற்கு, ஆதித்தியோப நிடதமே அமையுஞ்சான்றும். காயத்திரி மந் திரப்பொருள் சிவபிரானே; சவிதாவன்று. என்னை? அதனகத்துள்ள பர்க்கசத்தஞ் சிவபிரா னுக்கே இடுகுறியாகலானும், அவரே அறிவைப் பிரேரிப்பவராகலானு மென்பது. அப் பர்க்கசத் கூக தம் அகாராந்தமன்று, ஸகாராந்தமெனின்;— அதனகத்துள்ள யத்சத்தமும் தத்சத்தமு முறையே புல்லிங்கமு நபுஞ்சகலிங்கமு மாகலிற் றம்முள் அந்வயமுறா. ஆகவே, அந்வயமாத ற்குரிய அபின்னலிங்கத்தை அவாய் நிற்கும். அதனால், ஸகாராந்த மென்றல் பொருந்தாதென மறுக்க. வியாகரணநூலார் அசுன் பிரத்தியய கூஉ

---

௫கூ. காயத்திரி மந்திரமாவது:—ஓம் தத்ஸவிதுர்வ ரேண்யம்| பர்கோ தேவஸ்ய தீமஹி | தியோயோ ந: ப்ரசோத யாத்||என்பது. இம்மந்திரம் இருக்குவேதத்து ௩வது மண்ட லத்து கூஉ-வது சூக்தத்து ௰-வது மந்திரமாதல் அறிக.

கூ0. சவிதா—சூரியன்.

கூஉ. வியாகரணநூல்—பாணினீயம். இங்கே குறிக்கப் பட்ட சூத்திரம் பாணினீயம் ௬. க. ககஎ. அச்சூத்திர மாவது 'ஞ்நித்யாதிர் நித்யம்' என்பது.

மைத்திராயணச் சுருதியாவது:—'அதபர்கோ தேவஸ்ய

மாக கஞ்னுப்பிரத்தியயமாக ஈற்றில் வந்த பதங்களுக்கு ஆதியில் உதாத்தசுரம் வருமென்றலின், மைத்திராயணச் சுருதியில் அகாராந்தமாகக் காணப்படுதலின் திரிந்தகாரகமாகிய
௩௩ கஞந்தமேயென்க. இந்த மைத்திராயணச் சுருதி "பர்க்கர் தியானிக்கற் பாலர்" என்றும், "பர்க்கப்பெயருடையான் உருத்திரன்" என்றுங் கூறுமுகத்தானே, அது ஸகாராந்த மென்றலை நிரா
௩௪ கரித்தது. காயத்திரியின் முதற் பாதத்தைக் கடாவிடைகளாற் கூறி, "இரண்டாம் பாதம் பர்க்கமயம்" என்ற தலவகாரப்பிராமணமும் ஸகாராந்த மென்றற்கு இயையாது.

௩௫ அற்றேல், "எந்தப்பர்க்கன் எமது புத்தியைப் பிரேரிக்கின்றான் அதனைத் தியானிக்கிறோம்" என்று லிங்கபேதம் போதா அந்வயித்தல்

---

தீமஹீதி ஸவிதாவை தேவஸ்திதாயோ அஸ்ய பர்க: கம் ஸம்சிந்தயாமீத்யாஹுர் ப்ரஹ்மவாதிந:' என்பது.

௩௩. முன் ௩௨வது சுலோக விளக்கத்திற் கூறப்பட்ட சுருதியே பர்க்கர் தியானிக்கற்பாலரென்று கூறுஞ் சுருதி. பர்க்கப்பெயருடையான் உருத்திரனென்னுஞ் சுருதியாவது:- 'ருத்ரோ ப்ரஹ்மவாதிநோ அதபர்க இதி' என்பது.

௩௪. தலவகாரப்பிராமண மந்திரமாவது:—த்விதிய: பாதோ பர்கமய" என்பது. சாவித்திரி யுபநிடதம் பார்க்க.

௩௫. லிங்கபேதம்--பாலில் மாறுபாடு.

யாக்ஞவல்கியர் கூறுமாறு:—'தேவஸ்ய ஸவிதுர்மத்யே யோ பர்கோ நோ தியஸ்ஸ்வயம் | ப்ரசோதயாத்தம் வரேண்

னுமக்குஞ் சாலாதெனின்;—காயத்திரிக்குரிய பொருளாகிய சிவபிரானது பெயராகிய பர்க்க சத்தம் அவரின்வேறாகாத ஒளிக்கு முண்மையின், "அதனைத் தியானிக்கின்றோம்" என்பது அந்தப் பர்க்கனோடியையுடைத்தாய வொளியைத் தியானிக்கின்றோமென்று பொருள் படுதலின், எமக்கது சாலாமையாண்டை யதென்க. இது சாம்பமிருதி நூற் றுணிபென்க. "அதுவேயக்கரம்" என்றும், "அதுசவிதாவினுன் வரிக்கப்படும்பொருள்" என்றும், "அதனினின்றும் அறிவங்குரித்தது" என்றுஞ் சுவேதாச்சுவதரோபநிடதங் கூறுதலினுனுங்காயத்திரிக்குரிய பொருள் சிவபிரானேயென்பது தெற்றெனவுணர்க. இக்காயத்திரி மந்திரம் பர்க்கராகிய சிவபிரானையே யுணர்த்துவதாயி ௬௬ ௬௭

யந் தீமஹீத்யங்வயக்ரம:||' என்பது. சாதாதபர் கூறுமாறு 'தர்மாதி கோசரா யோநோ தியோபர்க: ப்ரசோதயாத் | தேவஸ்ய ஸவிதுச்சாபி வரேண்யம் தமுபாஸ்மஹே||' என்பது.

௬௬. சுவேதாச்சுவதரோபநிடத மந்திரமாவது:— 'ததக்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம் ப்ரக்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ||' என்பது. (சுவேதா. ௪. ௧௮.)

௬௭—௬௮. இவ்வுண்மையைச் சிவஞான சுவாமிகள் சிவதத்துவவிவேகத்திற் புருடசூக்தவிசாரணையில் 'விருப்புறு மேனோர் பூசனை விதியுள் விளம்பினு மவ்விதிக் கேற்பக், கருத்துறும் பொருட்டுப் பொருள் விரித்தறவோர் காட்டினுமிது வழுப்படாதே' (சிவதத்துவவிவேகம் ௨௨.) என்றருளிச் செய்தனர்.

னும், "சவிதா" வென்னுஞ் சத்தமாத்திரைபற்றி
ஆதித்தன்மேலுஞ்செல்லும். பிறண்டும் ஒருகட
வுளை யுணர்த்துமந்திரஞ் சத்த ஒப்புமையாற் பிற
கடவுண்மேலுஞ் செல்லுமென முனிவர் கூறுப:
௬அ அது அருக்கனைத் தெய்வமாகவுடைய இருக்கு
"விசுவதேவ" சத்தவொப்புமையாற் பிதிரர்
மேலும், "புஷ்ய" சத்தவொப்புமையாற் பூடண
தேவர் மேலுஞ் செல்லுமாற்றானுணர்க. பிறவு
௬௯ மன்ன. இனி இவ்வாறன்றிக், கிரகபூசாவிதி
யில் "சம்" என்று தொடங்கிய மந்திரத்தாற்
சனிபூசையும், "உத்புத்தியசுவ" என்றதனாற்
எ௦ புதபூசையும் கூறுதலுங்காண்க. "இருக்கு யசுசு
சாமமென்னும் வேதமூன்றனையு நன்குணர்ந்த

---

௬அ. அருக்கனைத் தெய்வமாகவுடைய இருக்காவது:— 'விச்வோ தேவஸ்ய நேதுர் மர்தோ வுரீதஸக்யம் | விச்வோ ராய இஷுத்யதி த்யும்நம் வ்ருணீத புஷ்யஸே||' என்பது. (ருக்வே. ௫. ௫௦. ௧.)

௬௯. 'சம்' என்று தொடங்கும் மந்திரமாவது:— 'சம்நோ தேவீர பிஷ்டயஞ ஆபோபவந்து பீதயே | சம்யோர பிஸ்ரவந்து ந:||' என்பது (ருக்வே. ௭. ௯. ௩.)

'உத்புத்தியசுவ' என்னும் மந்திரமாவது:— 'உத்புத்யஸ் வாக்நே' என்றுவரும் மந்திரம்.

௭௦. மநுஸ்மிருதி வாக்கியமாவது:—'த்ரிப்யஏவ து வேதேப்ய: பாதம்பாதம துதூஹத் | ததித்ய்ருசோ அஸ்யாஸ் ஸாவித்ர்யா: பரமேஷ்டீ ப்ராஜாபதி:||' என்பது (மநுஸ்மிருதி ௨. ௭௭.)

பிரமன் அவற்றின் சாரமாகிய மூன்று பாதத்தை யுடைத்தாய இக்காயத்திரியைக் கண்டான்" என்று மநுவாற் கூறப்பட்டது.

அரசர்க்குரிய இறைப்பொருளை அவன் வினை ௭௧ செய்வார் குடிகளிடத்திற் கொண்டு அவன்மாட்டுச் செலுத்தல் போலச் சிவபிரானுக்குரிய அவிசை அக்கினி யாகத்திற்கொண்டு அவர்மாட்டடைவிப்பனென்பது, அர்ச்சுனன் கண்ணன் மாட்டுச் சமர்ப்பித்த ஈசசம்பந்தமான திரவியங்கள் சிவபிரான் மாட்டுச் சென்றடைந்தமையால்

---

௭௧. 'கண்ணன்மே லணிமல ரனைத்துங் காயெரி, வண்ணன்மேற் காண்டலு மகிழ்ந்து மேதினி, யுண்ணுமா தவன் சிவ னுருவ மென்றுணர்ந், தண்ண லு முடல்புள கரும்பினனோ'—வில்லிபாரதம், பதின்மூன்றாம் போர்ச்சருக்கம்.

உ௧௩. இவ்வாறு கண்ணபிரான் சிவபிரானுக்குத் திருமேனியாம் பெருமை பெற்றமையை நம்மாழ்வாரும் வியந்து 'தீர்த்தனுலகளந்த சேவடிமேற் பூந்தாமஞ், சேர்த்தி யதுவே சிவன்முடிமேற் றான்கண்டு, பார்த்தன் றெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை, பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே' திருவாய்மொழி உ. அ. ௬.) என்று கூறினர். ஆயின், அடிமேற் சேர்த்தியது முடிமேற் கண்டு என்று கூறியது அபிமானம் பற்றியன்றி உண்மை பற்றியன்றென்க. மூத்தோளாயிரத்தில் 'செங்க ணெடியான்மேற் றேர்விசய னேற்றியபூப், பைங்கண்வெள் ளேற்றான்பாற் கண்டற்றா—லெங்கு, முடிமன்னர் சூடியபூ மொய்ம் மலர்த்தார் மாற, னடிமிசையே காணப் படும்' என வருதலுங் காண்க.

௭௨ இனி துணரப்படும். "யாகங்களிற் செய்யப்
படுஞ் சோமவிளியும் பசு நியோசனமுஞ் சிவ
பிரான்பொருட்டுச் செயற்பால" என்றும், "பால்
தயிர்முதலிய அவிசும் அவருடையன" என்றும்,
௭௩ வேதங் கூறும். சோமமும் பசுவுங் கவ்வியமுஞ்
சிவபிரானுடைய வாதல் பற்றியன்றே பசுவின்
அவிசிற் றத்தமக்குரிய கூற்றை அவராணையாற்
றேவர் பெறுவாராயிற்றென்பது. பசுவின் அவி
யொழிந்தவற்றிற்குச் சிவபிரானதாணை பெறப்
பட்டதின்றாலெனின்;—தலைமைப் பொருளாகிய
பசுவின் அவிசுக்கு அது பெறப்படவே, உபலக்
கணத்தால் பசுவின் அவியொழிந்தவற்றிற்கும்
௭௪ அதுதானே போதருமென்க. பசுபந்தனக் கிரி
யை மாத்திரையே சிவபிரான தாணையாற் செயற்
பாற்றென்பதும் பொருந்தாது, "எல்லாக்கிரியை
யுஞ் சிவபிரானதாணையாற் செயற்பால" எனச்
௭௫ சாமவேதமுடையார் கூறுதலின். "அக்கினியிற்

௭௨. சோமவிளிமந்திரம்:—'அயம் ஸோமம் கபர்தி
நே க்ருதம் ந பவதே மது' என்பது. பசுநியோசன மந்திரம்:
'இமம் பசும் பசுபதே தே அத்ய பக்நாமக்நே ஸுக்ருதஸ்ய
மத்யே அநுமந்யஸ்வ ஸயுஜா யஜாம ஜுஷ்டம் தேவாநாமித
மஸ்து ஹவ்யம்' என்பது. பால் தயிர் முதலிய அவிசும்
அவருடையன என்பதற்கு மந்திரம்:—'ரௌத்ரம் கவி' என்
பது.

௭௪. சாமவேத முடையார் கூறுமாறு:—'த்வாம் ப்ர
பத்யே த்வயா ப்ரஸூத இதம் கர்ம கரிஷ்யாமி தந்மே ஸம்
ருத்யதாம் தந்ம உபபத்யதாம்' என்பது.

செயப்படுஞ் சோமாகுதியுஞ் சிவபிரானுக்கேயுரியது'' என யசுர்வேதமுடையார் கூறுப. ''யாகங் ௭௬ களில் எஞ்சிநின்ற பொருள்களும் யாகபதியாகிய சிவபிரானுடையனவே'' என்று யசுர்வேதங் கூறும். ''கவ்வியத்தானுஞ் சோம அவிசானும் ௭௭ பசுவசருவானுஞ் செயப்படும் இருபத்தொரு யாகங்களுக்குஞ் சிவபிரானே அரசர்'' என வேதங் கூறும். அற்றேல் '' துவமக்கினே '' ௭௮ என்னு மந்திரமும், அதனையடுத்த மந்திரமும் ''உருத்திரனையுடைத்து அக்கினி'' என்று கூறுதலின், உடைப்பொருளாகிய சிவபிரானுக்கு அரசு பொருந்தாதாம் பிறவெனின்;—அற்றன்று. அரசனையுடைத்து இப்பூமி யென்றவழிச் சேதனனாகிய அரசன் உடைப்பொருளாதலும், அசேதனமாகிய பூமி உடையானாதலுஞ் செல்லாமையின் செல்லும்பொருட்டுப்பூமியையுடையான் அரசன் எனமாறிக் கொள்ளப்படுமன்றே; அதுபோல ''உருத்திரனையுடைத்து அக்கினி'' என்றதூஉங் கோடற்பாற்றாகலின், பொருந்தாமை யாண்டையதென்க. ரௌத்திரபசுவியத்தியில் இம் ௭௯ மந்திரங்கள் சிவபிரானையே உணர்த்தலினானும் யாகத்திறைமை அவர்க்கே யுரித்தென்க.

௭௭. சிவபிரானே யாகங்களுக் கரசரென்பது 'காதபதிம் மேதபதிம்' (ருக்வே. ௧. ௪௩. ௪.) என்னும் மந்திரத்தானும், 'ஆவோராஜாநம்' (ருக்வே. ௪. ௩. ௧) என்னும் மந்திரத்தானும் அறியப்படும்.

அ௰ அற்றேல், அக்கினியை யுடையான் உருத்திர னெனச் செவ்வனே கூறாது "உருத்திரனை யுடைத்து அக்கினி" எனப்பிறழக்கூறியதென்னை யெனின்;—ஒரு பயனோக்கி யங்ஙனங் கூறிற் றென்க. என்னையோ பயனெனின்;—உருத்திர னைப்பற்றியே அக்கினி சிறந்ததெனப் பொருட் பேறெய்துவித்தலே பயனென்க. தந்தையை யுடைய மாணவகனென்றற் றொடக்கத்தனவா கப் பிறண்டு மங்ஙனம் வருமாறறிக.

அக சிவபிரானுக்கு யாகபதித்துவம், உருத்திர சூத்த மந்திரத் தொகுதிக்குச் சிரோரத்தினம் போல அணிசெய்வதாய்ச் சிவநாம வலியுடைத் தாய யசுர்வேதத்தானன்றி, "மேதபதி" என

அஉ இருக்குவேதத்தானுங் கூறப்படுமென்க. "நிலை யாத் தேகம் விழுதற்கு முன்னர்ச் சிவபூசை செய்தற்பாற்று" என்ற சிவதருமவசனத்திற்கு மூலமாயதூஉம், இந்த "ஆவோ" என்னு மந் திரமேயென வறிக.

---

அக. உருத்திரசூத்தமென்பது திருவுருத்திரம். 'மேத பதி' என்று இருக்கு வேதங் கூறும் மந்திரமாவது:—'காத பதிம் மேதபதிம் ருத்ரம் ஜலாஷபேஷஜம் | தச்சம்யோ: ஸும்னமீமஹே||' என்பது. (ருக்வே. க. ௪௩. ௪.)

அஉ. சிவதர்ம வசனமாவது :—'யாவந்நயாதி மரணம் யாவந்நாக்ரமதே ஜரா | யாவந்நேந்த்ரிய வைகல்யம் தாவத் பூஜய சங்கரம்|| " என்பது. இதற்கு மூலமாயது 'ஆவோ

அரசன் கோபமிலனுய் இன்முகமுடையனுயி அ௩னும் அவன்மாட்டு அச்சங் குடிகளுக்கு நிகழுதல் இயற்கையே. அது போலச் சிவபிரான் இன்னருளன் மூர்த்தியாயினும், அனேக சூரியர் ஒரோவழித் தலைப்பட்டு விளங்குதலின், திரு உருத்திரத்துட் "பீமன்" எனப்படுகின்றார். இன்னும் வேதஞ் சிவபிரானை "அஞ்சத்தக்க அச வச்சிரம்" என்றுங் கூறும். இங்ஙனஞ் சிவ பிரான்மாட் டச்ச காரணத்துவ முண்மையி னன்றே, வாயு, பாநு, அங்கி, இந்திரன், இயமன் முதலிய தேவர் தத்தந்தொழில்களை அஞ்சி வகித்துய்க்கின்றாரென்க. இப்பய வேதுவைப் பிரம விலக்கணமென்ப.

---

ராஜாநம்' என எஎ-வது சுலோக விளக்கத்தில் குறிக்கப் பட்ட இருக்குவேத மந்திரம்.

அ௩. அரசனைக் கண்டவழி, குடிகட்கு அச்சநிகழ் தல் இயற்கை யென்பது 'தஸ்மாத்ராஜமுகம் பீஷ்மம் பாவுகம்' எனவரும் தைத்திரியப் பிராமணத்தா லறிக. திருவுருத்திரத்துள் 'நம: ஸோமாயச' என்னும் அநுவாகத்தில் 'பீமாயச' என வருதல் காண்க.

அச. 'அஞ்சத்தக்க வச்சிரமென்பது' கடோப நிஷதத்து வரும் 'யதிதம் கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நி:ஸ்ருதம் | மஹத்பயம் வஜ்ர முத்வயதம் யஏதத் விதுரம்ருதாஸதே பவந்தி' என்பது. (கடோப. ௬. ௨.)

சிவபிரான் மாட்டுள்ள அச்ச காரணத்தால் வாயு முதலியோர் தந்தந் தொழில்களை வகித்துய்க்கின்றாரென்பது 'பயாதஸ்யாக் நிஸ்தபதி' என்று தொடங்கிவரும் கடோப

அ௫ "சிவபிரானுக்குக் கோரத்திருமேனி சிவத் திருமேனியென இரண்டுண்டு" என்று வேதங் கூறுகின்றது. அவற்றுள், முன்னையது தம்மை வழிபடுமன்பர்களுடைய ஸம்ஸாரரோக நீங்கச் சிகிற்சை செய்வது; பின்னையது அருளுக்கால் அவர்க்குப் பசுத்துவத்தைக் கெடுத்துச் சிவத்து வாபிவியத்தியை விளைப்பது. சத்திரமிட்டறுத் தன் முதலிய கொடுந்தொழில்கள் வைத்தியன் மாட்டுளவேனும், வியாதியாளர் அவனையே

அசு சரண்டகுவர். அதுபோல ஸம்ஸார ரோகத்தினல் வருந்து முயிர்கள் அதனிவிர்த்திப் பொருட்டுச் சிவபிரானது கோரத் திருமேனியை வணங்கித், திருஉருத்திர மந்திரங்களாற் சாந்தி வேண்டுப. சிவத்துவாபிவியத்திப் பொருட்டுச் சிவத்திருமேனியைச் சமகமந்திரங்களால் உவப்பிப்ப. இவ்விரண்டு மந்திரங்களுஞ் சிவபிரானது ஓமத்தின் பொருட்டும் பிரயோகிக்கப்படும்.

---

நிஷத மந்திரத்தாலும் (கடோப. சு. ௩.), 'பீஷா அஸ்மாத் வாத: பவதே' என்று தொடங்கி வரும் தைத்திரீய உபநிடத மந்திரத்தாலும் (தைத்திரீய. பிரமானந்தவல்லி. அ) அறியப் படும்.

அ௫. திருவுருத்திரத்துவரும் 'யாதே ருத்ர சிவாதநூர கோராபாபகாசிநீ' என்னும் மந்திரத்தால் அவ்விரண்டு திரு மேனிகளதுண்மை யறியப்படும்.

அஎ. சமக மந்திரங்கள் அரி முதலியோரை அன்னாதி களுடன் சேர்த்து ஈயப்படும் பொருளாகக் கூறுதலை

இச் சமக மந்திரங்கள் அரி அயன் இந்திரன் அள ழகலியோரை அன்னுதிகளுடன் சேர்த்து, ஈயப் படும் பொருள்களாகக்கூறுகின்றன. சிவபிரான் அவற்றை ஈயுந்தாதாவாகலின், அவரை அங் ஙனம் கூறிற்றில.

பெரியோர் சந்நிதானத்திற் சிறியோரை ஒப் அஅ பச்சம்மானியாமை உலகிற் கண்டாமன்றே; அது போலச் சிவபிரானது சந்நிதானத்திற் றேவரை ஒப்பச் சம்மானித்தன் முறையன்மை நோக்கி, யாகத்தின்கட் சிவபிரானைக் குறித்துச் செய்யுங் கிரியாங்கத்திற் பரிசேசனஞ்செய்து, வேறுபாடு தோற்றுவிப்ப. இஃதறியமாட்டாது, அஃதிழிபு பற்றிய செயலென்று கூறு மறிவிலா ரென்கடவ ரென்க.

ஆன்மாக்களெல்லாம் பரதந்திரமுடைமையாற் அக பசுக்களெனப்படும். சிவபிரான் சுதந்திரமுடை மையால் அப்பசுக்களுக்குப் பதியெனப்படுவர். சுவேதாச்சுவதரோபநிடத முதலியன ஆன்மாக் களுக்கு அநீசத்துவமுஞ், சிவபிரானுக்கு ஈசத்

---

'வாஜச்சமே' என்று தொடங்கி 'அக்நிச்சம இந்த்ரச் சமே' எனக் கூறி வருமிடையில் 'தாதாசம இந்தரச்சமே விஷ்ணுச்சம இந்த்ரச்சமே' என வருதலானறிக.

அக. ஆன்மாக்களுக்கு அநீசத்துவமுஞ் சிவபிரானுக்கு ஈசத்துவமுங் கூறுஞ் சுவேதாச்சுவதர சுருதியாவது :—
'ஜ்ஞாஜ்ஞௌ த்வாஜாவீசாநீசாவஜாஹ்யேகா போக்த்ரு போகார்தயுக்தா' என்பது (சுவேதா. க. க.)

துவமுங் கூறும். இனி அவற்றிற்கும், அவருக் கும், அவ்விருதன்மையும் இயற்கையேயென்க.

கூW அற்றேல், "சிவபிரான் பசுபதித்துவத்தைத் தேவர்கட் பெற்றனர்" என்று வேதங் கூறியது மாறும் பிறவெனின்;—அற்றன்று. இயல்பாக வதனையுடைய சிவபிரான் வேண்டிப் பெற்று ரென்றன் முழு விரோதமாகலின், அஃதருத்த

கூக வாதமென்க. அல்லதூஉம், அதனை வாய்மை யெனக் கொள்ளின், தக்கன்வேள்வி சிதைத்தன் முதலிய அற்புதச் செயல்களைக் கூறும் வேத வாக்கியங்கள் போலியாய் முடியும். அதனானும், அஃதருத்தவாதமே யென்பது.

கூஉ "சிவபிரானுக்கு அழிவில்லாத அநேக திருமேனிகளுண்டு" என்று இருக்குவேதங் கூறுகின்றது. "சிவபிரானை வழிபடு மடியார்கள்

---

கூW. முப்புரமெரித்த அற்புதச்செயல் கூறுமிடத்து யசுர் வேதங் கூறுமாறு:—'ஸோऽப்ரவீத் வரம் வ்ருணை அஹ மேவ பசூநா மதிபதி ரஸாநி' என்பது. (யசுர்வே சு. உ) இதன்பொருள் 'நானே பசுக்களுக்கெல்லாம் அதிபதியாகுக என்று வரத்தை வரிப்பேனென அவன் கூறினான்' என்பது. இஃதருத்தவாத மென்பதை அப்பதீக்ஷிதர் பல பிரமாணங் கள் காட்டிப் பிரமதருக்கத்தவத்தில் (சுலோகம் உஅ முதல் நூச வரை) நிரூபித்தனர்.

கூஉ. 'ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர:' என்பது பரமசிவனுக்கு அழிவில்லாத அநேக திருமேனிகளுண் டென்று கூறும் மந்திரம். (இருக்குவே உ. நூந. கூ.)

அன்னத்தைப் புசிப்பர்'' என்று அதுவே கூறு கின்றது. அஃதங்ஙனங் கூறுமுகத்தானே, ௧௩. ''நாடோறும் உணற்குமுன்னர்ச் சிவபூசைசெயற் பாற்று'' என்னும் விதிக்கு மூலமாதலறிக.

சிவபுத்திரர்களாகிய மருத்துக்களைப் ''பரத ௧௪ சூனுக்கள்'' என்று வேதங்கூறியது அவருக்குத் திருநடனத்தொழி லுண்மைபற்றி யென்க. பார த்தை வகித்தல்பற்றிப் பரத னெனப்படுகின்று ரெனின்;—விசேடமாகிய திருநடனத் தொழில்

---

'சிவபிரானை வழிபடு மடியார்கள் அன்னத்தைப் புசிப் பர்' என்று கூறும் மந்திரம் :-' அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம் பரோ மநீஷயா க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா 'ஸஸம்' என்பது. இருக்குவேத (அ. ௬௧. ௩.) இதன் உபப்பிருங்கணம் பாராசரபுராணத்து வருதல் காண்க.

திருநாவுக்கரசு நாயனாரும் இக்கருத்தையுட்கொண்டு 'உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணு ராகில்' எனவும் 'அருப்போடு மலர்பறிதிட் டுண்ணு ஆரும்' எனவும் தனித் திருத்தாண்டகத்தில் அருளிச் செய்தனரென்க.

௧௩. நாடோறும் உணற்குமுன்னர்ச் சிவபூசை செய்யற் பாற்று' என்னும் விதியாவது சிவதரும சூத்திரத்தில் 'வரம் ப்ராணபரித்யாக: சேதநம் சிரஸோ அபிவா | நத்வநப்யர்ச்ய புஞ்சீயாத் பகவந்தம் த்ரிலோசநம்|| ' என வருவது.

௧௪. மருத்துக்களைப் பரதசூனுக்களென்று கூறும் மந் திரமாவது :-'' ஆஸத்யா பர்ஹிர் பரதஸ்ய ஸூநவ: என் பது. (இருக்குவேத உ. ௩. ௬. உ.)

சூனு—மகன்.

அவர்க்குளதாயிருக்க, அதுபற்றிக் கூறுது, அங்ஙனங் கூறுத லெற்றிற்கென்று கடாவி மறுக்க.

கூரு இருக்கு வேதந்திற் சிவபிரானை "வீரன்" என்
கூகூ றது காமன், இயமன், திரிபுரத்தர், தக்கன் முத லியோரைப் பங்கப்படுத்தினமை பற்றியென்க.

கூஎ ஆயிரஞ் சாகையுடைய சாமவேதத்தில் "ஆன்மாக்க ளெல்லாவற்றிற்கும் அதிபதி சிவ பிரான்" என அவர் மகிமை கூறப்பட்டது. அதனகத்துள்ள தேவவிரத முதலிய மந்திரங் களிற் சிவகணநாதர் மகிமை கூறப்பட்டது.

கூஅ குணங்களெல்லாவற்றானும் பிதாவாகிய சிவ பிரானோடு சமத்துவமுடைய விநாயகக்கடவுள் சுப்பிரமணியக்கடவுளென்னுந் திருக்குமாரரிரு வருஞ் சாமவேதத்தாற் றுதிக்கப்படுகின்றனர்.

---

கூகூ. சிவபிரானை வீரனென்று கூறும் மந்திரமாவது :- 'அபிநோவீரோ அர்வதி க்ஷமேத ப்ரஜாயேமஹி ருத்ரப்ர ஜாபி:' என்பது. (இருக்குவே உ. நந. க.)

கூஎ. சிவபெருமான் ஆன்மாக்களுக்கெல்லாம் அதிபதி யென்னும் சாமவேத மந்திரமாவது :-' அதிபாதாயி மித்ரா பாதாயி க்ஷத்ராபாதாயி ஸ்வ :' என்பது.

சிவகணநாதர் மகிமை கூறும் சாமவேத மந்திரமாவன:- 'யே தேவா திவிஷதஸ்த' என்பது முதலியன.

கூஅ. சாமவேதத்தில் 'ஜ்யேஷ்டாஜ்ஞஸ ஆத்மந' என்று தொடங்கும் வர்க்கத்தில் விநாயகப்பெருமானும், 'ஆமந்த்ரை

அதர்வசிகை "பிரமன்முதலிய பொருள்க ௧௧
ளெல்லாவற்றையுங் கைவிட்டுச், சிவத்துவத்
தைச் செய்தருளுஞ் சிவபிரானே புருடர்களால்
வீடுபேற்றின் பொருட்டுத் தியானிக்கற்பாலர்,
வீடுபேற்றிற் கேதுவாகும் வார்த்தையிதுவே
பிறிதில்லை" என்று கூறிமுற்றிற்று.

யசுர்வேதமுடையார் சிவபிரானோடுடன் ௩
றோன்றுதல் பற்றி, அருட் சத்தியாராகிய சிவ
பிராட்டியாரை அவர்க்குத் "தங்கை" என்று
கூறுப. அதர்வண வேதமுடையார் "பிரமன்
முதலியோரைநீக்கிச், சிவபிராட்டியாரோடு சிவ

---

ரிந்த்ர ஹரிபிராரோ விச்வாஸுஹவ்யம்' என்று தொடங்கும் வர்க்கத்தில் சுப்பிரமணியக்கடவுளும் துதிக்கப்படுகின்றனர்.

௧௧. 'ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ் தேஸம் ப்ரஸூயந்தே ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதைர் ந காரணம்' என்று தொடங்கி 'சிவ ஏகோ த்யேயச் சிவம்கரஸ் ஸர்வமந்யத்பரித்யஜ்ய ஸமாப்தா தர்வசிகா' என வருவது அதர்வசிகோபநிடதம்.

௩. சிவபிராட்டியாரைச் சிவபிரானுக்குத் தங்கையென்று கூறும் யசுர்வேத மந்திரமாவது :-'ஆருஸ்தே ருத்ர பசுஸ்தம் ஜுஷஸ்வைஷ தே ருத்ரபாக: ஸஹ ஸ்வஸ்ராம்பிகயா தம் ஜுஷஸ்வ' என்பது. (யசுர்வே. க. அ.) மாணிக்கவாசக சுவாமிகளும் இக்கருத்தை 'எம்பெருமானிமவான் மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன்றகப் பன்றமையன்' என்றருளிச் செய்தனர். (திருவாசகம்) திருப்பொற்சுண்ணம் கு.)

பிரான் றியானிக்கற்பாலர்" என்று கூறுப.

௱௧ வேதங்களெல்லாம் "ஏகனாகிய சிவபிரானே பதிப்பொருள்" என்று கூறினும், யசுர்வேத முடையார் அவரை அவர்தாதான்மிய சத்தியா ரோடு இருபொருளாக விவகரிப்ப. அச்சிவ பிராட்டியாருடைய வாக்குமனத்துக் கதீதமான பிரபாவ மனைத்தையும் புகலப் பிரமனும் வல்லுந னல்லன்.

௱௨ ஒரு திருமுகமும், மூன்று திருக்கண்ணும், நான்கு திருத்தோளும், வெண்ணிறமும் பொருந்திய சிவபிரானுடைய அழிவில்லாத் திருமேனி ஒன்றேனும், உபாசிப்பவர் உபா

---

'பிரமன் முதலியோரை நீக்கி' என்பதனை முன் கூகூவது சுலோக விளக்கத்திற் காட்டப்பட்ட அதர்வசிரோபநிடத மந்திரத்தாலும், 'சிவபிராட்டியாரோடு சிவபிரான் றியா னிக்கற்பாலர்' என்பதனை 'அத கஸ்மாதுச்யதே ஈசாந:' என்று தொடங்கி 'யஸ்ஸர்வாந் லோகா நீசத ஈசாநீபி: ஜநநீபி: பரமசக்திபி:' என்பனவாக வரும் அதர்வசிரோப நிடத மந்திரத்தாலும் அறிக.

௱௧. 'ஏகனாகிய சிவபிரானே பதிப்பொருள்' என் பதனை 'ஏக ஏவ ருத்ரோ நத்விதியாயதஸ்தே' எனவும் 'ய ஏகோ ருத்ர உச்யதே' எனவும் வரும் மந்திரங்களாலறிக. எனினும் சத்தியாரோடு இருபொருளாக வியவகரிக்கப்படு வதை 'ஸஹஸ்வஸ்ராம்பிகயா' எனவும் 'அம்பிகாபதய உமாபதயே' எனவும் 'பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே' எனவும் வரும் சுருதிகளாலறிக.

சனை வேறுபாடுபெற்றிப் பலவாய் விளங்கும். "கிராத வடிவரும் பினாகத்தைத் தரித்தவரும், ௱௩
தோலுடையருமாகிய சிவபிரானை, அவருடைய தருமபத்தினியாராகிய சிவபிராட்டியாரோடு பர்வகாலத்திற் செயப்படுஞ் சாகமேத மென்னுங் கிரியையிற் புண்ணிய அவிசுகளால் அநந்நிய பாவனையை யுடைய பத்தர் திரியம்பக மந்திரத்தாற் பூசிக்க" என்று கற்பசூத்திரத்திற் கூறப்பட்டது. "நல்லோர் சகத்தினுற் ௱௪
பத்தியின் பொருட்டு வீரிய மழையைப் பெய்வதூஉம், அணித்தாகிய மருங்கிற் பத்தினியாராகிய சிவபிராட்டியாரையும் நடுவிற் சுப்பிரமணியக் கடவுளையு முடையதூஉம், சராமரணரகித மானதூஉமாகிய விக்கிரகத்தை யுடைய சிவபிரானையும், அவருடைய துவார பாலகர்களையும், அவர் பத்தினியாரையும், தேவ

---

௱௩. 'ப்ரதி பூருஷமேககபாலம் நிர்வபதியாவந்தோ' என்று தொடங்கி 'பினாகஹஸ்த: க்ருத்திவாஸா:' என்பன வாக வரும் மந்திரங்களைக் கற்பசூத்திரத்துக் காண்க.

௱௪. யசுர்வேதத்தில் ஈசானபலி கூறுமிடத்து 'உபஸ்ப்ருசத மீடுஷே மீடுஷ்யை ஸ்வாஹா ஜயந்தோபஸ் ப்ருச ஜயந்தாய ஸ்வாஹா பவாய தேவாயஸ்வாஹா' என்பன வாகக்கூறி 'தேவஸேநா உபஸ்ப்ருசத தேவசேநாப்ய ஸ்வாஹா த்வாராதிபோபஸ்ப்ருச த்வாராதிபாய ஸ்வாஹா த்வாரப்யு பஸ்ப்ருச த்வாரப்யை ஸ்வாஹா நிஷங்கிந்நு பஸ்ப்ருச நிஷங்கிணே ஸ்வாஹா நமோ நிஷங்கிண இஷுதி மதே க்ஷேத்ரஸ்ய பதிநா வயம்' என வருதல்காண்க.

சேனையாரோடு தேவசேனரையும், கேத்திர பாலரையும் பூசிக்கின்றனர்" என்று யசுர்வே
௱௫ தத்திற் கூறப்பட்டது. "விரூபாக்கராகிய சிவ பிரானைச் சிவபிராட்டியாரோடும், திருக்குமாரர் களிருவரோடும், கணங்களோடும், பாரிடரோ டும், அட்டமிப் பிரதோடத்திற் பூசிப்பவர், தம்பாவத்தி னீங்கி, மிருத்துவையுங் கடப்பர்" என்று போதாயனத்திற் கூறப்பட்டது.

௱௬ தேவர்களுடைய மந்திரங்கள் சில; அவை அவர்களுடைய வரையறைப்பட்ட பிரபாவங்களை யே கூறும். சிவபிரானுடைய திருநாமங்களையும் திருமேனிகளையும் குணங்களையும் வருணிக்கு
௱௭ மந்திரங்கள் வரையிறந்தன. திருவுருத்திரத் திற் கூறப்பட்ட சிவபிரானுடைய திருநாமங் களும், திருமேனிகளும், குணங்களும் அன்ன.

௱௮ இனி வேதநூல் சுயம்புவானதுமாகுக; சிவ பிரானல் அருளிச் செய்யப்பட்டதாறுமாகுக; வேதவாக்கிய முழுதும் பிரமாணமே. வேதத் தின் வேறாய நூல்கள், அதனோடு விரோதியாத வழி, ஆக்கியோர் தாரதம்மியத்துக் கேற்பப் பிர மாணமாம். வேதம்போற் றிவ்விய சிவாகமமும்

---

௱௫. போதாயனர் 'தேவஸ்யாயநே ப்ரதிதிசம் ப்ரத்யோதயதி' என்பனவாகக் கூறுதல் காண்க.

௱௮. வேதம் சுயம்பு என்பார் மீமாஞ்சகர். ஈசுரப் பிரணீதமென்பார் தார்க்கிகர்.

பிரமாணமாம். அச்சிவாகமம், சிவத்தியானத் ௱௯
துக்கு உபயோகமாயுள்ள பதிபசுபாச மூன்றனை
யும் விளக்குவதாய்ச், சிவபிரானுக்குத் திருமுக
முதற் றிருவடியீறுயுள்ள அங்கங்களா யிருக்
கும். யாகவிதி கற்பசூத்திரத்தாற் பெறப்படு ௱௰
தல் போலத் தியாதாவும், தியானமும், தியேய
முமாகிய மூன்றுஞ் சிவாகமத்தாற் பெறப்படும்.
இருக்கியசூத்திரத்தில் உபநயன விதியிற் கூறப் ௱௰௧
பட்ட "அத்துவநாம்" என்னு மந்திரம் அத்து
வாவையும், அத்துவபதியையும், அத்துவாக்
களின் றாரதம்மியத்தையும், சிரேட்டாத்துவா
வெனப்படு மந்திராத்துவாவின் முடிபாயுள்ள
சிவத்தையுங் கூறுதலின், சிவாகமத்திற் கூறப்
படும் அத்துவாக்கள் வேதத்தினுங்காண்க.
இருடிகளாற் செய்யப்பட்ட கற்பசூத்திர முதலி ௱௰௨
யன பிரமாணமாகுமாயின், பெரிய விருடியாகிய
சிவபிரா னருளிச்செய்த சிவாகமம் பிரமாணமா
மெனக்கூறல் வேண்டுமோ வென்க. தவ வலியினொடு

---

௱௮–௱௰௧. இங்கே கூறப்பட்டதைச் சிவஞான பாடி யத்துச் சைவாகமப் பிராமாணியங் கூறுமிடத்து அருளிச் செய்தது கொண்டுதெளிக.

௱௰௧. அத்துவநாம் என்னும் மந்திரமாவது :—'அத்வ நாமத்வபதே ச்ரேஷ்டஸ்யாத்வந: பாரமசீய' எனவருவது.

௱௰௨. சிவபெருமான் பெரியவிருடி யென்றலை 'விச் வாதிகோ ருத்ரோ மகர்ஷி' என்னுஞ் சுருதியாலறிக. (சுவேதா. ௩. ௪., ௪. ௧௨)

ஞன் வேத சமூகத்தினின் ருெவ்வோர் மந்திரத்
தை யுணரப்பெற்ருனை யன்றே இருடி என்பவா
கலின், இயல்பாகவே அம்மந்திரங்க ளனைத்தை
யும் உணராநிற்குஞ் சிவபிரானைப் பெரிய விருடி
ராடுச யென்றற் காசங்கை என்னு மின்றென்க. சாங்கி
யர் பாச பசு பதி யென்னு மூன்றனையு முறையே
பிரதானம் புருடன் ஈசனெனப் பெயரிட்டு
வழங்குப. அது சிவாகமத்திற்கு முடன்பா
டேயென்க.

ராடுரு கிருகியசூத்திரகாரர் சிவபூசை கூறினரில்லை
யாலோவெனின்;—வேதத்திற் பெறப்படும்
புராணங்களிற் பிரசித்தமாயும் போதாயன
முனிவரால் விஸ்தரிக்கப்பட்டு மிருத்தலின்,
அதனை முற்று முணர்ந்த கிருகியசூத்திரகாரர்
கூருதொழிந்தார். அதுமட்டோ, அவர் முக்கி
யமாகிய யஞ்ஞோப வீதத்தையுங் கூருதொழிந்
ராடுசு தார். கூருததுகொண்டு சிவபூசைக்குக் குறை
வென்னை? வேதங்களுக்கு உபபிருங்கணங்களா
கிய புராணங்களிற் சிவபூசை ஆண்டாண்டு
மூழங்கப் படுகின்றது. அவ்வுபபிருங்கண வாயி

ராடுரு. சிவபூசை வேதத்திற் பெறப்படுதலை 'தமுஷ்டு
ஹி ய: ஸ்விஷ்டி:' (இருக்குவே. ரு. சஉ. கக.) 'ஆவோ
ராஜாநம்' (இருக்குவே. ச. ங. க.) 'அந்த ரிச்சந்தி,
(இருக்குவே. அ. சுக. ங.) என்பன வாதியாகவரும் மந்திரங்
களாலறிக.

-லால் வேதத்தை மூலமாகவுடைய மிருதிகள் கூறுமைபற்றிச் சிவபூசை குறையுறுமென்க. அல்லதூஉம், வேதப்பொருளை நிச்சயித்தற்குப் ஈ௨௦ புராணம் அங்கமாம். அப்புராணங்களா னிச்சயிக்கப்பட்ட வேதப்பொருளே மிருதிகளாம். ஆகவே, வேதம் போலப் புராணவசனம் பல முடையன; அவற்றின்முன் மிருதிகள் வலியுடையவாகா. அல்லதூஉம், அநுபலத்திக்கு ஈ௨௧ விடயமாகுஞ் சுருதியை மூலமாகவுடைமையினும் அவை பிரபல பிரமாணமாகா. ஆகவே, பிரத்தியக்க வேதத்தினன் விதிக்கப்பட்ட யாகம் மிருதியின் பார்வையை வேண்டாதவாறு போலச் சிவபூசையும் அவற்றின் பார்வையை வேண்டாதென்க.

இனிப் "பூர்வான்னத்திற் செயற்பாலனவா ஈ௨௯ கிய நியமங்களை முற்றி, நியதசித்தனாய்த் தேவபூசையைச் செய்க" என்று மநுவாற் கூறப்பட்டமையானும், சிவபிரான் றேவருள் வைத்து மகாதேவரெனப் படுதலானும், மிருதியினுஞ் சிவபூசை கூறப்பட்டதென்றே கோடும். அற்றேல், சிவபிரானுக்கு மகாதேவப் பெயருண்மைக்குப் ஈ௨௪

---

ஈ௨௯. மனுவாக்கியமாவது :—'குர்யாந்நியத சித்தஸ்து பூர்வாஹ்நே தேவதார்சநம்' என்பது.

ஈ௨௪. அதர்வசிரமந்திரமாவது :—'அத கஸ்மாதுச்யதே மஹாதேவோ யஸ்ஸர்வாந் பாவாந் பரித்யஜ்யாத்ம

பிரமாண மென்னையெனின்;—அதர்வசிரசே பிர
௱உ0மாணமென்க. அன்றியும், போதாயன சூத்தி
ரத்திற் சிவபிராட்டியாரோடும் இடபதேவரோ
டுஞ் சிவபிரானுக்கு ஈசானபலி கூறிப் பூசை
௱உஉவிதித்ததூஉங்காண்க. புத்திப்பொருட்டுச் செய
ப்படுவதூஉம் முத்திப் பொருட்டுச் செயப்படுவ
தூஉமெனச் சிவபூசை இருவகைப்படும். வேள்
வியும் அங்ஙனம் இருவகைப்படும்.

௱உ௩ சிவபிரான் றேவருட் பிராமணராகலின், அவர்
க்கு நிவேதித்ததனைப் புசிக்கலாகாதென முனி
வர் விலக்குப. அற்றாகலினன்றே "பிராமணருச்

---

ஞாநயோகைச்வர்யே மஹதி மஹீயதே தஸ்மாதுச்யதே மஹாதேவ :' என்பது. வடநாட்டுப் பிரதிகளில் பகவான் மகேசுரனென்னு மிருபெயர்களுக்குங் காரணங்கூறும் மந் திரங்களும் இம் மந்திரப்பகுதியும் விரவிக் காணப்படுகின் றன.

௱உ0. இஃது ஆபஸ்தம்பராலுங் கூறப்பட்டது.

௱உஉ. இதனைச் சிவஞானபாடியத்து எட்டாஞ் சூத் திர வுரையிற் கண்டு தெளிக.

௱உ௩, ௱உ௪. சிவபெருமான் தேவருட் பிராமணரென் பதற்குப் பிரமாணமாகிய சாமவேதத்துப் பிரபத மந்திர மாவது :—' தபச்சதேஜச்ச ' என்று தொடங்கிவருமிடை யில் ' த்வம் தேவேஷு ப்ராஹ்மணோ அஸி அஹம்மநுஷ் யேஷு ப்ராஹ்மணோவை ப்ராஹ்மணமுபதாவத்யுபத்வா தா வாமி ' யென்பது. சிவஞான சுவாமிகள் இம் மந்திரப் பொருளைப் 'பிராமணனீயே கடவுளர் தம்முட் பிஞ்ஞக

சிட்ட மனைத்தையு நிலத்திற் புதைக்க அல்லது சலத்திலெறிக" என்று கற்பசூத்திரத்திற் கூறியதூஉமென வுணர்க. பிராமணர்க்குப் பிராமணராஉசுராகிய சிவபிரானையே வழிபடுதல் தகுதியாம். ஏனைக் கீழ்வருணத்தராகிய தேவரை வழிபடுதல் பிராமணர்க்குத் தகுதியன்று. அற்றேல், சிவபிரான் றேவருட்பிராமணர் என்றற்குப்பிரமாண மென்னையெனின்;—சாமவேதத்திலுள்ள பிரபத மந்திரமே பிரமாணமென்க.

முனிவர் உயர்புடையதனையும் இழிபுடையாஉருதனையும் ஒப்பவிலக்குப: தீக்கிதவன்னத்தையும் பதிதவன்னத்தையும் விலக்கினமையானும், "சண்டாளன், சண்டிலன், மசான பாலகன்,ாஉசு

---

வேனையோர் தம்முட், பிராமணன் யானே பிராமணன் றனக்குப் பிராமணன் கதியுனை யிகழ்வோன், பிராமணனல்லன் றன்குல தெய்வம் விண்டுபின்னென்றனைத் தொழுமப், பிராமணர்க்கிரண்டும் பயப்படா நிரயம் புகுவனென்றுயர் மறைபேசும்' என்றருளிச் செய்தனர். (காஞ்சிப்புராணம் காயாரோகணப்படலம். க.)

'பிராமணருச்சிட்ட மனைத்தையும் நிலத்திற் புதைக்க அல்லது சலத்திலெறிக' என்னும் கற்பசூத்திர விதியாவது :—'ப்ராஹ்மணஸ்ஞீய முச்சிஷ்ட மப்ஸுவா நிக்ஷிபேத் பூமௌவா நிகநேத்' என்பது.

ாஉரு - ாஉஅ. முனிவர் என்றது ஹாரீதரை. அவர் பதித அன்னத்தை விலக்குதல் 'யதந்நம் ப்ரதிலோமஸ்ய' என்பனவாகக் கூறுதலானும் தீக்கிதஅன்னத்தை விலக்குதல்

கள்விற்போன், பசு, பிராமணன், அக்கினி, தீக்கையுடையான், பெண்களென்னு மிவரைப்
௱உஎ பரிசிக்கற்க" என்றமையானும், அக்கினிபோலுந் தீக்கிதவன்னத்தை விலக்கியவர்தாமே, "இராசபரிக்கிக மென்னுங் கிரியை செய்த பின்னர் அதனைப் புசிக்க" என்றமையானும், "சங்கத்தின் அத்திபாவனம்" என்றும் "மநுட அத்தி அபாவனம்" என்றுங் கூறினமையானும், அதற்
௱உஅ குக் காரணங் கூறப்படாதென்க. சிவபிரானை யொழிந்தொழிந்த தேவர்களுக்கு நிவேதிக்கப்படு மன்னம் அப்பிராமணருடைய பசிநிவிர்த்திப் பொருட்டுபயோகப்படுக.

வைசுவதேவமென்னுங் கிரியையில் அத்தேவர் சேடத்தால் அக்கினி முதலிய தேவர்க்குப்
௱உகூ பலியிடலாகாது: அற்றேல், தேவர்களுக்கு நிவேதியாத அன்னத்தால் வைசுவதேவ பலியிட்டு, அவர்க்கு நிவேதித்த அன்னத்தைப் புசிக்கலாமெனக் கொள்ளாமோ வெனின்;—கொள்

---

வர்ஜ்யாந்நோதீக்ஷிதோ விப்ரைர் யாவத்ராஜ பரிக்ரியா' என்று கூறுதலானும் அறியப்படும்.

'இராஜ பரிக்கிரக மென்னுங்கிரியை செய்த பின்னர் அதனைப்புசிக்க' என்றமை 'க்ருதராஜபரிக்ரியோ போஜ்யாந்ந:' என்னுஞ் சுருதியானறிக.

'சங்கத்தின் அத்திபாவநம்' 'மநுட அத்தி அபாவநம்' என்பதனை 'நாரம் ஸ்ப்ருஷ்ட் வாஸ்திஸஹஸா ஸவாஸா ஜலமாவிசேத்' என்னும் மிருதி வசனத்தாலறிக.

ளாம். என்னை? "அசனத்துக்குரிய அன்னக் கூற்றினொற்றனே பலியிட்டுண்க" என விதிக்கப் பட்டமையின்.

முன்னொருகாலத்திற் "சிவபிரான் பிரமக்கொரு௲ ஒலக்காகப் பலியேற்றனர்" என்பதை உணரப் றுவார்க்கு, அது திருவிளையாடல் மாத்திரையே யென்பது இனிதுவிளங்கும். சிவபிரான் பிரமன் றலையைப் பறித்தமையானன்றே அவன் றீர்க்காயு ளுடையனுய்ச் சீவிக்கின்றனென்க. அது திரு௲௧ விளையாட்டன்று, பிராயச்சித்தமெனின்;—நாபி முதற் சாநு பரியந்தஞ் சாணவத்திரந் தரித்தல், கையிற்கபாலதுண்டந்தரித்தல், கொடி தண்டம் பிணத்தலை தரித்தல், ஏழுவீட்டிற் பலியேற்ற லென விதிக்கப்பட்ட பிராயச்சித்தாநுட்டானம் அவர்கட்காணப்படாமையான், அது பொருந்தா தெனமறுக்க. அல்லதூஉம், காலபைரவர்௲௨ செய்த பிரமகத்திக்குச் சிவபிரான்பிராயச்சித்தஞ் செய்துகோடல் செல்லாதென்க. செல்லுமேல், கற்பங்கடோறும் அவர்செய்யும் பிரமகத்தி

---

௲௧. மிருதியிற் கூறப்பட்ட பிராயச்சித்தவிதியாவது:— 'ப்ரஹ்மக்னோ வஸநம் சாணம் கபால சகலம்கரே | கேது யஷ்டௌ சவசிரோ பைக்ஷம் ஸாப்தே நிகேதநம்' என் பது.

௲௨. சிவபிரானது சங்காரத்தொழிற் சிறப்பு 'ஹரிம் ஹரந்த மநுயந்தி தேவா: விச்வஸ்யேசாநம் வ்ருஷபம் மதீ நாம்' எனச் சுருதியிற் கூறப்பட்டது.

விண்டுகத்தி முதலியவற்றிற்குஞ் சிவபிரான் பிராயச்சித்தஞ் செய்து கோடல் வேண்டும்; அவ்வாறு செல்லாமையின், அது திருவிளையாடல் மாத்திரையே யென்பது.

௱௩௩ பரமேசராகிய சிவபிரான் றேவர்கட் பசுபதித்துவம் பெற்றுக்கொண்டருளியதனையும், அவர் பயிக்கம் புகுந்தருளியதனையும், அறிந்துரைக்கப் பிருகஸ்பதியும் வல்லானென்க.

௱௩௪ இனிச் சிவபிரான் "பிரமன் விண்டுவாயினர்" என்றும் "பிறவெல்லாமாயினர்" என்றும், அறிவிலார் அபேதபாவனை பேணுதற்கேது, பிறிதோராற்றாற் பெறப்படாமையின், அத்தேவரடைந்த இழிவை மறைத்தலொன்றோ மோகம் அடைதலொன்றோ இரண்டனுளொன்று திட்பமுடைத்தாதல் வேண்டுமென்க.

௱௩௫ அற்றேலஃதாக; வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப்பொருளாகிய சிவபிரானுக்கும் உயிர்களுக்கும் அத்துவிதங்கூறியதென்னை யெனின்;— கருடனு மாந்திரிகனும் தம்முள் வேறுதல்

௱௩௫. இந்தச் சுலோகத்தின் மூன்றும் பாதத்தில் 'அளீகம்' என வருதலைச் சிவஞான சுவாமிகள் தாம் அருளிச்செய்த சிவசமவாதவுரைமறுப்பில் 'ஒன்றெனு மதனூல்' என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்திற்கு ஞானப்பிரகாசர் கூறியவுரை பொருந்தாதெனை நிரூபிக்கு

வெளிப்படையாயினும், கருடோகம் பாவனை விடத்தை நீக்கன்மாத்திரைக்கே வேண்டப் படும். அது போலச் சிவன் சீவன் என்னும் பதார்த்தங்க ளிரண்டும் தம்முள் வேற்றுமை யுடையன வென்பது தேற்ற மாயினும், உயிர் களுக்கு மலநீக்கத்தின் பொருட்டு வேதத்தி லத்துவித சிவோகம் பாவனை கூறப்பட்டது. இங்ஙனமாகலின், அதுகொண்டுதானே நிருப சரிதைக்கியங் கூறுதல் சாலாதென்க.

சிவபிரான் பிரமனுடைய ஐந்தாஞ் சிரசைக்௱௬௯ கிள்ளினரென்றும், பிரமனரியிருவரும் அவரு டைய திருமுடியினையுந் திருவடியினையுந் தேடி யுழன்றனரென்றும், யாம் முழங்குவேம். அது மூடபுத்தியுடையார் அழுக்கறுத்தற் கேது வாக.

சோமக் கொடிக்கு விண்டுவின்மாட்டு உற்௱௬எ பத்தி கூறியது கௌணவிருத்திபற்றியாகலின், அது முக்கியவிருத்திபற்றிச் சிவபிரானையே

---

மிடத்து எடுத்தாண்டு 'அதுகொண்டுதானே நிருபசரிதைக் கியங் கூறுதல் கூடாதென்பதாம்' என்று அருளிச்செய் தனர்.

௱௬எ. சோமக்கொடிக்கு விண்டுவின்மாட்டு உற்பத்தி கூறிய சுருதியாவது:—'ஸோம: பவதே ஜநிதாமதீநாம் ஜநிதா திவோ ஜநிதா ப்ருதிவ்யோ ஜநிதாக்நேர் ஜநிதா ஸூர் யஸ்ய ஜநிதேந்த்ரஸ்யஜநிதோத விஷ்ணோ:' என்பது.

௱௩௮ அயனையும். சிவபிரானும் விண்டுவும் ஒருவருக் கொருவர் சௌனகராயின், வரம்பு கடந்து, நாமுஞ் சிவபிரானாகுவம். சிவபிரானு நாமாவர். பொருள்களி னியல்பை மாற்றுதல் சிவபிரானு

௱௩௯ டைய ஆணைக்கும் இயலாதென்க. விண்டு முதலிய தேவர்போற் பிறக்கக் கருதுதல் சிவ பிரானுக்குஞ் செயற்கரிய தொன்றாகும். அது அத்திரி பத்தினியால் வேண்டப்பட்டும் அவள் கருவிற் புக்கு உதிக்கமாட்டாமையான் இனிது

௱௪௰ விளங்கும். விண்டு கருவிற்புக்குதித்தது சுவேச் சை யெனின்;—கருப்பாசயத்திற் கட்டுண்டு நெடுங்காலங் கிடக்க எவனுமிச்சியா னாகலின், முற்பிறவியிலீட்டிய வினைக்கீடாகவே அவற்கு

௱௪௧ இச்சை நிகழ்ந்த தென்றொழிக. அற்றேல், பாரதமுதலியவற்றில் விண்டுவினுடைய அவ தாரத்தைச் சுவேச்சையென்றதென்னை யெனின்; அது குணவாத மென்க.

௱௪௨ சிலர் பிரமனையும் சிலர் விண்டுவையும் சிலர் ஏனைத் தேவர்களையு முபாசிப்ப. அவ் வுபாசனைகள் உலகத்திற்பயன் பயப்பனவன்றி வீடுபேற்றினைப் பயக்காவாம். “ ஒருவன் ஆகா யத்தை ஆடையாக்கிக் கொள்ளுமாயின், சிவ

௱௪௨. சுவேதாச்சுவதரசுருதியாவது:—‘ யதா சர்ம வதாகாசம் வேஷ்டயிஷ்யந்திமாநவா : | ததாசிவ மவிஜ்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி||’ என்பது. சிவபாத்துவத்திற்

பிரானை உபாசியாது, துக்கத்தினீங்கி, வீட்டினைத் தலைப்படும்.'' என்று சுவேதாச்சுவதராச் சுருதி கூறுதலின், வீடுபேற்றின் பொருட்டுச் சிவபிரானையே உபாசிக்க. உடைந்தமரக்கலம் ௱௪௪ பிறிதொருமரக்கலத்தைக் கரையடைவிக்கமாட்டாது; அதுபோலப் பிறந்திறந்துழலுந் தேவர் அவ்வாறுழலுமெம்மனோர்க்குச் சரணாகமாட்டார். முயலிற்கோடும், ஆகாயத்திற்பூவும், ௱௪௩ கானலினீரும், மலடிமாட்டு மகப்பேறு முளவாயின், ஏனைத் தேவரை யுபாசித்தலான் வீடுபேறுந் தலைப்படுமென்க.

தேவருடைய பலபிறப்புக்களை நோக்கும்வழி ௱௪௫ நமக்குக் கழிபேரச்ச நிகழாநின்றது. ஆகலின், சிவபிரான் அப்பெற்றியவாம் பிறப்புக்களைத் திருவிளையாட்டுக்கேனும் மேற்கொள்ளா தொழிக. சிவபிரான்மாட்டு யாம் வேண்டிப் பெறும் பேறிதுவே. சிவபிரானை யொழித்து ௱௪௯ தொழிந்த தேவரைத் துதிக்கும் அறிவிலார் என்கடவர்.

---

பொறாமைகொண்டோர் சிலர் இம்மந்திரத்துவரும் 'சிவ' என்னும் பதத்தைத் 'தேவ' என மாற்றியிருக்கின்றனர். அவர் இம் மந்திரத்திற்கு உபபிருங்கணம் 'ஸர்வோபநிஷதாமர்தச்சிவஏவ நசாபர: | ஏகமேவ ஹி தத்ஜ்ஞாநம் ததஜ்ஞாநஸ்ய நாசநம் ||' என வாமநபுராணத்து வருதலையறிந்திலர். அன்றியும் கந்தபுராணத்துப் 'பரசிவனுணர்ச்சியின்றிப் பல்லுயிர்த்தொகையுமீண்டே, விரவிய துயர்க்கிறுதி வீடு

௱௪௭ சிவனடியார் திருக்கூட்டத்தையே விரும்புவேம். பிள்ளைமைப்பருவத்துஞ் சிவனடியார் திருவடிப் பொடிகொண்டே மண்விளையாட்டுச்
௱௪௮ செய்யப்பெற்றேம். ஆண்டானாகிய சிவபிரானைத் துதிக்க அடியேமுக்கு வலியில்லையேனும், அவர் திருவருள்கொண்டே அவரைத்துதித்தேம். அங்ஙனம் துதித்தேமுக்கு, அடியார்க்கெளிவந்த கருணைவள்ளலாகிய சிவபிரான், உபவீதம்போற் றரித்தருளிய புனித ஆடையினையும், திரிபுண்டரத்தினையுமுடையராய் வெளி
௱௪௯ நின்றருளித் தம்முடைய அநுசரரைக்கொண்டு பாயசான்னத்தைக் கொடுப்பித்தருளினர். அதனைப்பெற்றுண்டு, சொப்பன சமாதியோ என்று கருதி யோகிகளைப்போலத் தெளிந்தேம்.

௱௫௰ இந்நூலைப் படித்து இதன்பொருளை உள்ளவாறுணரப்பெறுவார்க்குக் கொள்ளற்பாலது பிறிதொன்றில்லை; அறிதற்பாலதும் பிறிதொன்றில்லை; எல்லாப்பேறும் இதனானேயுண்டாம்.

---

பேறடைதுமென்கை, யுருவமில் விசும்பிற் றேலை யுரித்துடுப்பதற்கொப்பென்றே, பெருமறை பேசிற்றென்னிற் பின்னுமோர் சான்றுமுண்டோ' என வருதலையும், காஞ்சிப்புராணத்து 'மாறுடன் விசும்பைத்தோல்போற் சுருட்டுதல் வல்லோனாயி, னீனமில் சிவனைக்காணு திடும்பைதீர் வீடுமெய்து, மானமார் சுருதி கூறும் வழக்கிவை யாதலாலே,

இந்நூல் சிவபிரானுக்கோ ராரமாக. மக்காருக-ளுக்கு வேத சிவாகமப்பற்றைவிளக்க. பசுநூற் பற்றைக்கெடுக்க. சிவபிரான் றிருவடிப்பற்றை வளர்க்க.

சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்
முற்றிற்று

---

யானம ரிறைனயைக் காணு முபாயமே யறிதல் வேண்டும்' என வருதலையும் அவர் அறிந்தாராயின் 'சிவ' என்பதே மந்திரத்துள்ளதென உணர்வர்.

திருச்சிற்றம்பலம்

---

# அருப்பொருள் விளக்கத்தில் எடுத்தாளப்பட்ட நூல்கள்

அதர்வசிகோபநிடதம்
அதர்வசிரோபநிடதம்
ஆதித்தியபுராணம்
ஆதித்தியோபநிடதம்
ஆபஸ்தம்ப சூத்திரம்
இருக்கு வேதம்
இலக்கணக்கொத்து
கடோபநிடதம்
கந்தபுராணம்
காஞ்சிப் புராணம்
கிருகிய சூத்திரம்
கைவல்லியோப நிடதம்
சாந்தோக்கியோப நிடதம்
சாம வேதம்
சாவித்திரியுபநிடதம்
சிவசமவாதவுரை மறுப்பு
சிவஞான பாடியம்
சிவதத்துவ விவேகம்
சிவதரும சூக்தம்
சுவேதாச்சுவதரோபநிடதம்
திருஞான சம்பந்தர் தேவாரம்
திருநாவுக் கரசர் தேவாரம்
திருவாசகம்
திருவாய்மொழி
திருவுருத்திரம்
தைத்திரீயப் பிராமணம்
தைத்திரீயோபநிடதம்
நாராயணோபநிடதம்
நீலகண்ட பாடியம்
பிரமதருக்கத்தவம்
போதாயன சூத்திரம்
மநுஸ் மிருதி
மூத்தொள்ளாயிரம்
மைத்திராயணோபநிடதம்
யசுர் வேதம்
வாமந புராணம்
வில்லிபுத்தூரார் பாரதம்
முதலியன.

---